

உறையூர்

# அருண்மிகு பஞ்சவர்ணேசுரர் திருத்தல வரலாறு

உ

திருச்சிற்றம்பலம்

# உறையூர்
# அருண்மிகு பஞ்சவர்ணேசுரர் திருக்கோயில்
# திருத்தல வரலாறு


எழுதியவர்

ஞானமணி, ஞானத்தமிழாகரர், புலவர்

**டாக்டர். வை.இரத்தினசபாபதி,** பி.ஓ.எல்., எம்.ஏ., பி.எச்.டி.,

தத்துவத்துறை

சென்னைப் பல்கலைக் கழகம்

சென்னை.


## திருக்கோயில் நிர்வாகம்

திரு. **M. தங்கம்** அவர்கள் அறங்காவலர் குழுத்தலைவர்

திரு. **T. சுப்ரமணி** அவர்கள் அறங்காவலர்

திரு. **S. செல்வம்** அவர்கள் அறங்காவலர்

திரு. **K. ரெத்தினகுமார்** அவர்கள் அறங்காவலர்

திரு. **G. சம்பத்குமார் B.Sc., B.Ed.,** அவர்கள் நிர்வாக அதிகாரி


**திருக்கோயில் வெளியீடு**

உரிமைப்பதிவு **1998** விலை

## அன்பர்கள் நினைவுக்கு

திருத்தலப் பெயர் — உறையூர் (பீடார் உறந்தை)
கோழியூர்,
வில்வாரணியம்.

திருக்கோயிலின் பெயர் — திருமூக்கீச்சுரம்

திருத்தலநாதரின் பெயர் — திருமூக்கீச்சுரத்தடிகள்
(சுயம்புலிங்கம்) — பஞ்சசவர்ணேசுவரர்
ஐவண்ணப் பெருமான்
ஐந்நிற நாயனுர்
நிறங்கள் ஓர் ஐந்துடையார்
(திருவாசகம்)

அம்மையின் பெயர் — காந்திமதியம்மை

தீர்த்தம் — சிவதீர்த்தம்
நாகதீர்த்தம், சர்ப்பநதியின்
கிளையாகிய குடமுருட்டி

திருவருண்மரம் — வில்வம்

வழிபட்டுப் பயன்பெற்ருேர் பிரமன் உதங்கமுனிவர்

பாடிப் பரவியவர் — திருஞானசம்பந்தர்
மகாவித்வான் மீனுட்சிசுந்தர பிள்ளை
1. உறையூர்ப் புராணம்
2. காந்திமதியம்மை பிள்ளைத் தமிழ்

திருத்தலப் பெருமை அ. இறைவன் கோழியாக வந்து
பட்டத்து யானையின் மதம்
அடக்கிய வரலாற்றுப்
பெருமையுடையது.
இதனுலேயே கோழியூர்
எனப் பெயர் பெற்றது.

ஆ. பிரமனுக்கு உலகப்
படைப்புக்காக ஐந்நிறங்களைத்
தன்னிடமிருந்து தோற்றிக்
காட்டிய பெருமை.

இ. உதங்கமுனிவருக்கு ஐவகை
வழிபாட்டுக் காலங்களில்
ஐவகை இலிங்கங்களாகக்
காட்சியளித்தமை.
(கருவறை மூலவர் சித்திரலிங்கமாக
இருப்பதை இன்றுங் காணலாம்)

ஈ. நாயன்மார்களில் புகழ்ச்
சோழ நாயனரின் தலம்.

உ. ஆழ்வார்களில் திருப்பாணழ்
வார் அவதரித்த தலம்,
திருவரங்கம் தெய்வ
நிலேயத்தைச் சார்ந்த ஸ்ரீ கமல
வல்லி நாச்சியார்
திருக்கோயில் தலம்.

# முன்னுரை

தமிழகத்து அறநிலைய ஆட்சித்துறையினரின் ஆணையின் படி 1955ல் அமரர். பேராசிரியர் பஞ்சநதம் பிள்ளை அவர்களால் எழுதப்பெற்று உபயதாரர்களைக் கொண்டு தேவஸ்தானத்தினரால் வெளியிடப்பெற்ற உறையூர், ஸ்ரீ பஞ்சவர்ணேச்வரர் ஸ்தல புராணம் ஒன்று உண்டு. அதன் பிரதிகள் தீர்ந்துவிட்ட நிலையில் அதைத் தழுவியும், சில திருத்தங்களைச் செய்தும் டாக்டர் வை. இரத்தினசபாபதி அவர்கள் துணை கொண்டு இரண்டாம் பதிப்பு வெளியிடப்பெற்றது. அப்பிரதிகள் யாவும் தீர்ந்தது விட்டபடியால் மூன்றும் பதிப்பாக இத்தல புராணம் தேவஸ்தானத்தாரால் வெளியிடப்படுகிறது.

"ஊரென்ப்படுவது உறையூரே" என்ற பழமொழிக்கு இலக்கியமாக நின்ற உறையூர் திருஞானசம்பந்தரால் பாடப்பெற்ற பெருமையுடையது. கோயிலைத் 'திருமூக்கீச்சுரம்' என்றும் திருக்கோயில் இறைவன் பெயரைத் 'திருமூக்கீச்சுரத்தடிகள்' என்றும் திருஞானசம்பந்தர் குறிப்பிடுகின்றார்.

சங்ககாலம் முதல் இந்நாள் வரையிலும் பழமையும் பெருமையும் கொண்டு விளங்கும் உறையூர்த் திருமூக்கீச்சுரம் திருப்பணி செய்து குடமுழுக்கு விழா நடத்தப்பெற்ற வகையிலுங்கூட மிகப் பழமை வாய்ந்த தலமாகவே இன்று வரை இருந்து வருகிறது.

இத்திருக்கோயிலுக்கு இராஜகோபுரம் ஒன்று இல்லாதது பெருங்குறையாக இருந்து வருகிறது. தற்போது பொறுப்பேற்றிருக்கும் அறங்காவலர் குழு இராஜ கோபுரம் மற்றும் திருக்கோயில் வளாகத்தில் ஒரு திருமண

மண்டபமும் கட்ட முயற்சி எடுத்து வரும் இவ்வேளையில் இத்திருத்தல வரலாற்று நூல் வெளியிடப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.

உறையூர் திருச்சி 620 003. இங்ஙனம்

நாள் 30.12.1998 **G. *சம்பத்குமார்* B.Sc., B.Ed.,**

செயல் அலுவலர்

திரு. G. இராஜநாயகம் B.A.,B.L., திருச்சிராப்பள்ளி
இணை ஆணையர் 23.12.1998
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை
திருச்சிராப்பள்ளி

## வாழ்த்துரை

பீடார் உறந்தை என்றும் கோழி மாநகர் என்றும் சங்க இலக்கியங்களில் போற்றிப்புகழப்படும் வரலாற்றுச் சிறப்புமிக்க உறையூரில் புகழ் பெற்று விளங்குவது அருள்மிகு பஞ்சவர்ண சுவாமி திருக்கோயிலாகும்.

இக்கோயிலின் திருத்தல வரலாற்றினை 1955ல் அமர் பேராசிரியர் R. பஞ்சநதம் பிள்ளை அவர்களால் எழுதப்பெற்று வெளியிடப்பட்டது. அதன் பிரதிகள் முற்றும் தீர்ந்து விட்ட காரணத்தினால் 1985ல் டாக்டர் வை. இரத்தினசபாபதி அவர்களால் மேலும் செம்மைப்படுத்தப்பட்டு தலபுராணம் வெளியிடப்பட்டுள்ளது. அப்பிரதிகளும் தீர்ந்துவிட்டப்படியால் இப்போது மேலும் சில திருத்தங்கள் செய்து, அறநிலையத்துறையினரால் நியமிக்கப் பெற்ற அறங்காவலர் உள்ளிட்ட கோயில் நிர்வாகத்தினரால் தற்போதைய தேவையைப் பூர்த்தி செய்யும் வகையில் இத்தல வரலாறு மூன்றாம் பதிப்பாக வெளியிடப் பெறுகிறது. இப்பணியில் சிறப்பாக ஈடுபட்டு இத்தலவரலாற்றை வெளிக்கொணர்ந்த இக்கோயில் அறங்காவலர் குழுவுக்கும் நிர்வாக அதிகாரிக்கும் எனது பாராட்டுதல்களையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வண்ணம்
ஒப்பம் G.இராஜநாயகம் B.A.,B.L.,
இணை ஆணையர்

**கி. ஸ்ரீதரன்,** எம்.ஏ
பதிவு அலுவலர்
தொல்பொருள் ஆய்வுத்துறை
திருச்சிராப்பள்ளி

## வாழ்த்துரை

திருச்சிராப்பள்ளி நகரின் ஒரு பகுதியாக விளங்கும் உறையூர் வரலாற்றுச் சிறப்புடைய நகரமாக விளங்கியிருக்கிறது. உறந்தை, கோழியூர், கோழி மாநகர், வில்வாரண்யம் எனவும் வேறு பெயர்களால் அழைக்கப்படுகிறது.

சங்ககால சோழர் தலைநகர ஆக விளங்கிய உறையூரில் 1964லிருந்து 1969 ஆம் ஆண்டு வரை சென்னைப் பல்கலைக்கழகத்தின் தொல்லியல் பிரிவு அகழ்வாராய்ச்சியநினை மேற்கொண்டது உறையூரின் தொன்னைச் சிறப்பினை எடுத்துக்கூறும் வகையில் பண்டைய தமிழ் எழுத்துப் பொறித்த பானை ஓடுகள், ரோமானிய பானை ஓடுகள், சுடுமன் பொம்மைகள், கல் மணிகள், போன்றவை கிடைத்துள்ளன.

உறையூரில் வரலாற்றுச் சிறப்பு மிக்கதும் திருஞானசம்பந்தரால் பாடல்பெற்ற தலமாய் விளங்கும் அருள்மிகு பஞ்சவர்ணேசுவரர் கோயில் தலவரலாறு பேராசிரியர் ஆர் பஞ்சநாதம் பிள்ளை அவர்களால் எழுதப் பெற்று, பேராசிரியர் முனைவர் வை. இரத்தின சபாபதி அவர்களால் திருத்தம் செய்யப்பெற்ற தலவரலாறு மீண்டும் திருக்கோயிலரால் வெளியிடப்படுவது மகிழ்ச்சியை அளிக்கிறது.
தமிழகத் திருக்கோயில்கள் வரலாற்றுச் சிறப்பும், வழிபாட்டுச் சிறப்பும், இலக்கியச் சிறப்பும் உடையதாக விளங்குகிறது. கோயிலுக்கு வழிபடச் செல்பவர்கள் கோயிலன் பெருமையை அறிந்து கொள்வதற்கு இத்தலவரலாறுகள் பெரிதும் உதவுகின்றன. மூக்கீச்சுரம் என அழைக்கப்படும் அருள்மிகு பஞ்சவர்ணேசுவரர் கோயில் தலவரலாற்றினை வெளியிட ஆவண செய்த திருகோயில் செயல் அலுவலரையும், திருக்கோயில் நிர்வாகத்தையும் போற்ற வேண்டும். தலவரலாற்றினைப் படித்து காந்திமதியம்மை உடனாய பஞ்சவர்ணேசுவரர் அருள் பெற்று அனைவரும் நலம் பெற வேண்டுகிறேன்.

கி. ஸ்ரீதரன்

## உறையூர்
## அருண்மிகு பஞ்சவர்ணேசுரர் திருத்தல வரலாறு
## மலர் வெளியிட நன்கொடை அளித்தவர்கள்



**Mr & Mrs. Vishnu Das**
**Kumar Gems**
160, Big Bazaar Street, Tiruchirapalli - 620 008
Ph : Shop 701359 Resi : 763955



**R. Sangilimuthu**
R. Sangilimuthu & Co,
58, Palayam Bazzar, Woraiyur,
Trichy - 3
Ph : Mill : 760003, Res : 761009



**J. Subramanian**
36, Old Hospital Road,
Mailam, Trichy - 8
Ph : 708991



**S. Jegathisan**
25, Mudhaliyar St.,
Thirutthanthoni, Woraiyur
Trichy - 3

உ

திருச்சிற்றம்பலம்

# திருச்சிராப்பள்ளி உறையூர்
## திருமூக்கீச்சுரம்
என்னும்

அருண்மிகு

# பஞ்சவர்ணேசுவரர் திருக்கோயில்
## திருத்தல வரலாறு

"ஐயனே நீறுபூசும் அழகனே மழுமானேந்தும்
கையனே காலற்காய்ந்த காலனே கன்னிபாக
மெய்யனே உறந்தைமேய விமலனே பஞ்சவர்ணச்
செய்யனே செய்யதேவர் தேவனே போற்றி போற்றி"

# உள்ளுரை



## இணைக்கப்பெற்றுள்ள படங்கள்

# திருக்கோயிலின் இருப்பிடமும்

## உறையூர்

திருவுகக்கும் தமிழ்நாட்டில் திருச்சிராப்பள்ளிப் புகை வண்டி நிலையத்திலிருந்து வடமேற்கே 5கி.மீ தூரத்திலும், திருச்சிராப்பள்ளிக் கோட்டைப் புகைவண்டி நிலையத்திலிருந்து நேர்மேற்கே 2 கி.மீ. தூரத்திலும் உள்ளது உறையூர்.

கைத்தறி ஜவுளி உற்பத்தியில் உறையூர்ச் சேலைகள் வேட்டிகளும் உறையூர் சுருட்டு பீடி ஆகியவைகளும் பெரும் புகழ் பெற்றவை. ஆகையால் வியாபாரத்துறை மூலமாகவும் மக்களால் அறியப் பெற்ற ஊரே உறையூர்.

கங்கையிற் புனிதமாய காவிரி என்று பாராட்டப் பெறும் காவிரியின் தென்கரையில் இன்று சிற்றூராகக் காட்சி தரும் உறையூர் சோழப் பேரரசின் தலைநகரமாக இருந்த பெருமையுடையது.

''மாட மதுரையும் பீடார் உறந்தையும்'' என்பது சங்க இலக்கிய வரி பீடு பெருமை அறத்தால் பெருமை பெற்றது உறையூராதலின் ''அறந்துஞ்சு உறந்தை'' எனப் பெற்றது. பல அறங்கள் நிரம்பி இருப்பதாலும் பல பொருள்கள் மிகுந்து விளங்குவதாலும் இன்பம் உறைதலாலும் உறையூர் என்று பெயர் பெற்றதாகக கூறுவர்.

''பழிஇல் நன்பொருள் மிக்கு உறைதலால் உறையூர் எனப் பகர்வார்'' என்பது மகா வித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் வாக்கு.

## திருக்கோயில்

"ஊரெனப்படுவது உறையூரே" என்று போற்றப்பெறும் உறையூருக்கு நடுவே திருக்கோயில் அமைந்துள்ளது. "திருமூக்கிச்சுரம்" என்பது திருக்கோயிலின் பெயர். திருக்கோயிலின் உள்ளிருக்கும் மூலமூர்த்தியின் பெயர்

"மூக்கீச்சுரத்தடிகள்" எனத் திருஞானசம்பந்தர் தாம் பாடிய பதிகத்தில் உள்ள பதினொரு பாடல்களிலும் குறிப்பிட்டுள்ளார். சேர, சோழ, பாண்டியர் என்று மூன்று பெரு வல்லரசுகளையும் இணைய நிறுத்தி, அவர்களை இணைத்து வாழ வைக்கும் மூலப் பேரரசாக மும்முடி மன்னர்களின் மன்னராக விளங்குபவரே திருமூச்சுரம் என்ற கோயிலின் உள்ளிருக்கும் மூலமூர்த்தி என்று விளக்கம் அமைத்துள்ளார், திருஞானசம்பந்தர்

பஞ்சவர்ணேசுரர் ஐவண்ணநாதர் என்ற பெயர்கள் இப்போது வழக்கத்திலுள்ளவை. அம்மையின் பெயர் காந்திமதியம்மை.

## 3
## திருக்கோயிலமைப்பும் வரைபடமும்

கிழக்கு நோக்கிய சந்நிதியை உடைய திருக்கோயிலின் முகப்பில் ஒரு மண்டபம், மண்டபத்தை ஒட்டியதாய்க் கோபுர அமைப்புடைய நுழைவாயில். இராஜகோபுர அமைப்பில் தொடங்கப்பெற்ற இம்முகப்பு வாயில், கோபுரம் இல்லாத வெற்றுமண்டப அமைப்பிலேயே நின்று விட்டது. முகப்பு மண்டபத்துக்குத் தெற்கிலும் வடக்கிலும், மண்டபத்துக்கு வெளியில் முறையே விநாயகர், முருகர்,சந்நிதிகள் உள்ளன. முன் முகப்பு மண்டபத்தை ஒட்டியே திருக்கோயிற் சுற்றுமதில் அமைக்கப்பெற்றுள்ளது.

முகப்பு வாயிலேக் கடந்து சென்ருல் இடது பக்கத்தே சிவ தீர்த்தம் என்ற பெயருள்ள திருக்குளமும், வலது பக்கத்தே திருக்கோயில் நிர்வாக அலுவலகமும் அமைய, நடுவே நந்தி மண்டபம் அமைந்துள்ளது.

நந்தி மண்டபம் கடந்து சென்ருல், திருக்கோயிலின் இரண்டாவது நுழைவாயில். இது முகப்பு வாயிலுக்கு அடுத்ததாகிய உள்வாயில். இதற்கு மூன்று நிலேக் கோபுரம் உண்டு.

இரண்டாவது நுழைவாயில் அல்லது கோபுரவாயிலேக் கடந்து உள் சென்ருல் உள் பிராகாரத்தை அடையலாம். உள் பிராகாரத்தின் தெற்கில் நிலேக்கண்ணுடி : புகழ்ச்சோழர், நால்வர், உதங்க முனிவர் திருமேனிகள்

உள்ளன. மேற்கில் விநாயகர், முருகர், இலக்குமி முதலியோர் சந்நிதிகள் உள்ளன. வடக்கில் வாகன மண்டபம், உற்சவ மண்டபம் உள்ளன. கீழ்புறத்தில் நவக்கிரகங்கள், சனீஸ்வரன், பைரவர், சூரியன் ஆகியோர் திருமேனிகளும், மடைப்பள்ளியும் உள்ளன.

உள் பிராகாரத்திலிருந்து மூலவரை நோக்கிச் சென்றால் பலிபீடம், கொடி கம்பம், நந்தி ஆகியவைகளைக் காணலாம். அங்கே உள்ள படிகளைக் கடந்து மேலே சென்றால் வலப்பக்கத்தே மேற்புறம் காந்தியம்மை சந்நிதியும், கீழ்ப்புறம் பள்ளியறையும் உள்ள மண்டபத்தை அடையலாம்.

மூன்றாவது நுழைவாயிலின் உள்ளே சென்றால் எழுந்தருளும் திருமேனிகள் (உற்சவ மூர்த்திகள்) மண்டபம், கூத்தப் பெருமான் சந்நிதி. மேலும் உள்சென்றால் மூலவரின் கருவறை.

தருமூக்கிச்சுரம் என்ற திருக்கோயிலுக்கு மொத்தம் மூன்று பிரகாரங்கள். திருக்கோயில் உள்ளேயே உட் பிரகாரமும், நந்தி மண்டபத்தை ஒட்டிய பிரகாரமும் என்ற இரண்டு பிரகாரங்கள் உண்டு. வீதிப் பிரகாரம் இக் கோயிலின் மூன்றும் பிரகாரமாக அமைகிறது.

திருக்கோயிலமைப்புப் படம் தனியே இணைக்கப் பெற்றுள்ளது.

# திருக்கோயில் வரைபடம்



1. மண்டப நுழைவுவாயில்
2. விநாயகர் சந்நிதி
3. முருகன் சந்நிதி
4. நுழைவாயில்
5. நந்தி மண்டபம்
6. சிவதீர்த்தம்
7. அலுவலகம்
8. கோபுரவாயில்
9. மடைப்பள்ளி
10. நவக்கிரகம்
11. சனீஸ்வரர், பைரவர், சூரியன் திருமேனிகள்
12. நிலைக்கண்ணாடி
13. புகழ்ச்சோழர் (4.7.57) நால்வர், உதங்கமுனி மூர்த்தங்கள்
14. விநாயகர்
15. முருகன்
16. இலக்குமி

16ஏ. சரஸ்வதி

17. வாகன மண்டபம்
18. உற்சவ மண்டபம்
19. பலிபீடம் கொடிக்கம்பம்

20 காந்திமதியம்மை சந்நிதி

21 பள்ளியறை

22. கருவறை நுழைவுவாயில்
23. உற்சவ மூர்த்திகள் மண்டபம்
24. மூலவர் கருவறை

# 7
# சிற்பங்களும் கட்டிட அமைப்பும்

தமிழ்நாட்டில் கருங்கல் திருப்பணி இடம் பெற்றுள்ள கோயில்களில் சிற்ப வேலைகள் சிறப்பாக அமைந்துள்ளன என்பது பொதுக் கருத்து. ஆயினும், உறையூர்த் தலத்துக்கே உரிய சில சிற்பங்களையும் அவற்றின் பெருமைகளையும் தெரிந்துகொள்ளுதல் வேண்டும்.

சிற்பங்களை வரலாற்றுப் பெருமையுடன் தெரிந்து கொள்ளும் அதே நேரத்தில், திருக்கோயில் அமைப்பு முறையினையும் வரலாற்றுடன் இணைத்துத் தெரிந்து கொள்ள வேண்டும்.

## திருப்பணி 1

சங்ககாலச் சோழர்கள் உறையூரைத் தலைநகராகக் கொண்டு, ஆட்சி நடத்திய பெருமையுடையவர்கள். கோப்பெருஞ்சோழன் போன்றோர் வரலாறு இதனை உறுதிப்படுத்தும்.

உறையூரில் சோழ அரசன் ஒருவன் யானை மேல் உலா வந்தபோது, யானைக்கு மதம் பிடித்துவிடவே, அரசனும், பாகர்களும் செய்வதறியாது திகைக்க, அப்போது கோழி ஒன்று தன் குரலெழுப்பிக்கொண்டு வந்து, பட்டத்து யானையின் மத்தகத்தின் மேல் நின்று தன் மூக்கினுல் கொத்தவே, யானை தன் மதம் அடங்கிப் பழைய நிலையை அடைந்தது. யானையை அடக்கிய கோழியானது ஒரு வில்வ மரத்தடியில் சென்று மறைந்ததாக, அந்த இடத்தை அகழ்ந்து பார்க்க, அங்கே சிவலிங்கம் இருக்கக் கண்டு, ஆலயம் எடுத்து, வழிபாடு செய்தான் சோழன். இதுவே திருமூக்கிச்சுரம் என்ற பெயருடைய

திருக்கோயில். இதனை ஒட்டி உறையூருக்குக் 'கோழியூர்' 'முக்குடபுரி' 'வாரணம்' என்ற பெயர்கள் வழங்கின. இச்செய்தியை

முறஞ்செவி வாரணம் முன்சமம் முருக்கிய
புறஞ்செவி வாரணம்

என்று சிலப்பதிகாரம் பேசுகிறது. இவ்வரலாற்றையே புராணம் சிறிது வேறுபாட்டுடன் கூறுகிறது.

சோழ அரசன் பவனி வரும்போது இவ்விடத்தின் பெருமையையும், தான் மறைந்திருப்பதையும் அந்த அரசனுக்கு அறிவிக்க எண்ணி, இறைவன் ஓர் கோழியைக் கடைக்கண்ணால் நோக்கினார். பெருமானது அருள் நோக்கம் பெற்ற கோழியானது பெருவலி படைத்துக் கொக்கரித்து, சிறகடித்துப் பறந்து சென்று, அரசனது பட்டத்து யானையின் மத்தகத்தில் குத்தித் தாக்கியது. கோழியின் தாக்குதலுக்கு ஆற்றாத யானை அலறிக்கொண்டு ஓடியது. அப்போது, "அரசனே உனது நகரின் ஒரு பாலுள்ள வில்வனைத்து விமலன் செய்த திருவிளையாடல் இது. இந்நகரின் பெருமையை விளக்குவதற்காகச் செய்தது. இந்நாள் முதல் 'கோழி மாநகர்' என்று பெயரிடுக. நீயும் இவ்விறைவனைப் போற்றி வாழ்க" என்று கூறியது இதுவே, புராண வரலாறு.

பின்னர் கோழியின் அமைப்பிலேயே ஊரும் அமைக்கப் பெற்றது என்ற வரலாறும் உண்டு. இவ்வகையில் உறையூரானது சீராா் உறந்தை எனவும்வாரணம் எனவும் பெயர் பெற்றது. கோழியூர் நிகழ்ச்சி நடைபெற்றது எக்காலத்தில் என்பது வரையறை செய்ய முடியாது எனினும், சிலப்பதிகார காலத்துக்கு முற்பட்டது எனக்கொள்வதில் தடையில்லை.

சங்க இலக்கியங்களில் சேர, சோழ பாண்டியர் களுக்குரிய மூன்று விழாக்கள் சிறப்பாகப் பேசப் பெறுகின்றன.

உறையூர் பங்குனி உத்திர விழாவை உடையது.
மதுரை ஆவணி மூல விழாவை உடையது.
கருவூர் உள்ளி விழாவை உடையது.
எனவே, திருமூக்கிச்சுரம் என்ற பெயரில் திருக்கோயில் திருப்பணி நடைபெற்று, பங்குனி உத்திர விழா நடைபெற்ற பெருமையையும் தென்னவன், செம்பியன், வில்லவன் என்ற மூவரும் வந்து வழிபட மேலாய் நின்ற மன்னவன் என்ற மூர்த்திப் பெருமையையும் சங்க இலக்கியங்களாலும், திருஞானசம்பந்தர் பதிகத்தாலும் உணரலாம். இத் திருப்பணியைச் செய்தவன் சங்ககாலச் சோழன் ஒருவனே. புராணங்களில் இவன் வீரவாதித்த சோழன் என்று கூட்டப் பெறுகிறான்.

முதல் திருப்பணிக்குரிய சான்றுகளே இன்றுங் காலைலாம் வரைபடத்தில் 14 15 16 எண்களால் குறிக்க பெற்றுள்ள இடங்கள் முதல் திருப்பணி அமைப்பி லேயே உள்ளன. அடுத்தடுத்துத் திருப்பணி செய்த வர்கள் அப்பகுதியை, தொட்டு வேலை செய்ய வேண்டாத வாறு பழுது படாமலேயே இன்று வரை உள்ளது.

திருமூக்கீச்சுரத்தடிகள் என்ற பெயருடைய மூலவர் கருவறையில் உள்ள இலிங்கத் திருமேனி சுயம்பு இலிங்கம் தேவகோட்டை சித. முரு முருகப்ப செட்டியார் திருப்பணியின் போது மூல இலிங்கத்தைப் பெயர்ப்பதற்காகப் பதினான்கு அடிகளுக்கும் மேல் தோண்டியும கருவறைத் திருமேனியை அசைக்க முடியவில்லை திருவடிப் பகுதியும் காணப்பெறவில்லை.

நீருற்றுப் பெருகிவிட்டதால், மேலே தோண்டும் முயற்சியையும் கைவிட்டு விட்டார்கள். சுயம்பு மூர்த்தி என்ற காரணத்தாலேயே, மேலே குறிப்பிட்ட செட்டியார் திருப்பணியில், கருவறையின் முகப்பில், மேலே ஸ்ரீ சக்கரம் அமைத்துள்ளளார்கள் என்பதை இன்றுங் காணலாம்.

அடுத்து, கருவறையில் உள்ள சுயம்புலிங்கம் சித்திர இலிங்கமாக அமைந்துள்ளது. இலிங்கத் திருமேனியின் முற்பகுதி தவிர ஏனைய பகுதிகளில் கோடுகள் தெரிகின்றன.

திருஞானசம்பந்தர் தம் பதிகத்தில் சேர, சோழ, பாண்டியர்களாகிய மூவேந்தர் மூவரையும் தத்தம் ஆட்சியில் நிலை நிறுத்துகிற பேராட்சி மன்னை் என்றே இத்தலத்து இறைவனைப் பாடியிருக்கிறுர். சோழனைச் கோழி என்றும் சோழியன் என்றும்சுட்டியிருக்கிறுர் இறைவன் ஆற்றிய பெருமைகளைச் சொல்லி வருகின்றவர்

அடிக்ள் செய்கின்றதோர் செம்மை
அடிகள் செய்கின்றதோர் பச்சை.

என்ற நிறங்களின் இணைப்பின் மூலம் சில செயல்களைக் குறிப்பிடுகிறுர். அப்படியாயின் அது பிரமனுக்கு ஐவண்ணம் காட்டிய அருளிப் பாட்டினையும், உதங்க முனிவருக்கு ஐந்து இலிங்க வண்ணம் காட்டிய காட்சியையும் உடன்கொண்டதாக அமையலாம்.

சித்திர இலிங்க அமைப்பினை விளக்கும் கோடுகள் கருவறை மூலவரின் முடிப்பகுதியில் அழகுற விளங்குவதை நாம் இன்றும் காணலாம்.

யானையை அடக்கிய கோழி, சித்திரலிங்கம் என்ற

இரண்டு பெயர்களுக்குரிய வரலாறுகளை இணைத்துப் பார்த்தால் திருமூக்கீச்சுரத்தடிகள், சித்திரலிங்கமாகத் தம்மைக் காட்டிய நிலையில் அமைந்த திருப்பணி யானது மூவரசரும் வந்து வழிபடக்கூடிய நிலையில், பேரரசர் திருக்கோயிலாக அமைந்திருக்க வேண்டும். உதங்க முனிவர் வரலாற்றினல் சிவதீர்த்தம், அதை ஒட்டிய ஐவகைக் கால வழிபாட்டு முறை ஆகியவை இருந்தன எனத் தெரிகிறது. அவ்வகையில் திருப்பணி நடை பெற்றிருக்க வேண்டும். மேற்குப் பிராகாரத்து மண்டபம் இருந்திருக்க வேண்டும். சுற்றுமதிற்சுவரோடு பின் மண்டபம் அமையும் வகையில் அத்திருப்பணி அமைந்திருக்க வேண்டும்.

## திருப்பணி 2

சூரவாதித்த சோழன் வேட்டையாடி வரும் போது நாகதீர்த்தர் கரையில் (சர்ப்பநதி எனப் பெயர் பெற்ற தீர்த்தம் உறையூருக்கு வடக்கே குடமுருட்டி வாய்க்காலாக இன்றும் ஓடுகிறது: இதைக் குறிப்பிட்டிருக்கலாம்.) நாகராசனின் ஐந்து பெண்களும் தனித்தனி இலிங்கம் வைத்துப் பூசிப்பதைக் கண்டான். ஐவர்களின் இளையவள் காந்திமதி. சோழன் அவளைக் காதலித்து மணந்த பின், காந்திமதி நாகலோகம் சென்று, தன் தந்தையாகிய நாகராசனிடம் அவன் பூசித்த இலிங்கத்தின் ஒரு பாதியையும், தன் தாய் பூசித்த காந்திமதியம்மை திருவுருவத்தையும், தான் பூசித்த இலிங்கத்தோடு தன் சகோதரிகள் பூசித்த இலிங்கங்களையும் கேட்டுப் பெற்று வாங்கி வருகிறாள்.

நாகலோகத்து அரசன் பூசித்த இலிங்கம், ஐந்து பெண்கள் பூசித்த ஐந்து இலிங்கங்கள் ஆக ஆறு

இலிங்கத்தையும் தனித்தனியே அமைத்து, நாகலோக த்திலிருந்து கொண்டு வந்த காந்திமதியம்மை திருவுருவத்தையும், சூர ஆதித்த சோழன் தன் அறையில் வைத்துப் பூசித்து வந்தான், ஒரு நாள் ஆறு இலிங்கங்களும். காந்தியம்மை திருவுருவமும் காணப் பெருதவனவாயின. அப்போது அசரீரி வாக்கானது நாம் வில்வனத்தில் வில்வ நிழலில் ஆறு உருவமும் ஓர் உருவமாகிப் பக்கத்தில் தேவியுடன் வீற்றிருக் கிறோம். அவ்விடமே நமக்கு விருப்பம். அவ்விடத்தி லேயே கோயிலை அமைப்பாயாக என்று கூறியது. அவ்வாறே சூரவாதித்தன் கோயில் கட்டுகிறான். இங்கே குறிப்பிடப்பெறும் ஆறு இலிங்கங்களும் நாக லோகத்தில் பூசிக்கப் பெற்றவை. இவை ஆறும் ஓர் உருவடைந்து வில்வ வனத்தில் இருந்தது என்பதாலும், காந்திமதியம்மை என்ற தேவியுடன் இருப்பதாகக் கூறியமையாலும், இந்த இலிங்கத்தையும் திருமூக்கீச் சுரத்து அடிகள் எனவும் உதங்க முனிவருக்குப் பஞ்ச வர்ண வடிவம் காட்டிய சித்திரலிங்கம் எனவும் வழங்கப் பெற்ற இலிங்கத்தையும் ஒன்றுகக் கருதிவி க்கூடாது.

சூரவாதித்த சோழனுக்குக் கூறிய அசரீரியானது காந்திமதியம்மையுடன் இணைந்த இலிங்கம் எனவும் அது ஆறு பகுதிகள் ஒன்றுக இணைந்த ஓர் இலிங்கம் எனவும் கூறியருக்கிறது. திருமூக்கீச்சுரத்து அடிகள் விடங்கர் எனப்பெறும் சுயம்புமூர்த்தம். கோழி வரலாற்றை நிகழ்த்தியபின், தேவியோடு கூடிய இலிங்கமாக அது வழிபடப் பெற்றதற்குச் சான்று ஏதும் இல்லை. உதங்கமுனிவரும் காந்திமதியம்மையுடன் கூடிய இலிங்கத்தை வழிபட்டதாக வரலாற்று முறையில் சான்று ஏதும் கிடைக்கவில்லை.

மேலும் அசரீரியும் ஆறு உருவமும் ஓர் உருவமாகிப் பக்கத்தில் தேவியுடன் விற்றிருக்கிறோம். அவ்விடமே நமக்கு விருப்பம் அவ்விடத்திலேயே கோயிலை அமைப்பாயாக என்று கூறியமையால். அவ்வடிப் படையில் சூரவாதித்த சோழன் புதிய கோயில் ஒன்றையே அமைக்க வேண்டியிருந்தது என்பதை உணரலாம். முன்னமேயே உள்ள சித்திர இலிங்கத்தில் இணைந்துவிட்டதாகக் கூறிய சான்று இல்லை. அப்படி இணைந்துவிட்டிருந்தால் கோயிலை அவ்விடத்தில் அமைப்பாயாகஎன்று சொல்லவேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில் முன்னமேயே கோயில் இருக்கிறது. மேலும் முன்னது சுயம்பு மூர்த்தம் அசரீரி வாக்கின்படி சூரவாதித்த சோழன் அமைத்த திருக்கோயில் சுயம்புத் திருமேனியைக் கருவறைத் திருமேனியாகக் கொண்டிருந்திருகக முடியாது. இதை உறுதிப்படுத்தும் வேறொரு சான்றையும் நாம் இங்கே காணுதல் வேண்டும்.

திருக்கோயிலின் வரைப்படத்தில் 7 என்ற எண்ணிற் காட்டப் பெற்றிருப்து அலுவலகம் அதை ஒட்டியே அதன் கீழ்ப்பகுதியில் ஒரு கோயில் இருக்கிறது. அது அம்மன் கோயில் என்ற வழக்கில் இருந்திருக்கிறது. அங்கே தான் காந்திமதியம்மையின் திருவுருவம் இருந்த தாகவும், அதைப் பெயர்த்துக் கொண்டுபோய், இன் றுள்ள இடத்தில் அமைத்ததாகவும் முன்றும் திருப்பணி வரலாறு எடுத்துக் காட்டும். இப்போது அங்கே அம்மன் திருவுருவம் இல்லை. மேலும், அங்கே ஓர் இலிங்கம் பிரதிட்டை செய்யப்பெற்று இருந்ததது. காந்தி மதியம்மையை இடம் மாற்றிய பிறகு அங்கு இருந்த சிவலிங்கத் திருமேனியைக் கொண்டுபோய் வேறிடத்தில் வைத்திருக்கலாம்.

காந்திமதியம்மையை இப்போதுள்ள இடத்தில் அமைத்துவிட்டதால் திருமூக்கீச்சுரத்தடிகளே, ஐவண்ண நாதரே காநதிமதியம்மையின் பதியாகவும் அமைந்து விடுகிருர். இவ்வகையில் சூரவாதித்தசோழன் பூசித்த ஆறு இலிங்கங்களின் இணைப்பாக நின்ற ஒர் இலிங்கம். ஐவண்ண நாதருடன் ஒன்றிக் கலந்து விடுகிறது. காந்திமதியம்மையின் திருவுருவமானது சூரவாதித்த சோழன் கதாலித்து மணந்த நாககன்னியாகிய காந்திமதியின் தாய் பூசித்து வ்நது காந்திமதியம்மை திருவுருவம். எனவே, நாகலோகத்து அரசி மரபு வழியாகப் பூசித்த காந்திமதியம்மையே இன்று நம்மால் வழிபடப் பெறும், ஐவண்ண நாதரின் திருத்தேவியாகிய காந்திமதியம்மை என அமைகிருள்.

காந்தியம்மை இன்று கருங்கற்றிரு முமேனியாக விளங்கினுலும் நாக அரசர்களின் குலதெய்வமாக விளங்கிய கோதை. நாகர் உலகைக் காத்த குலக்கொடி இந்நரர் உலகையும் காக்க முற்பட்டாள். நாகர் குல தெய்வம் இங்கே தங்கி நம்மைக் காத்து வருகிருளா தலின் இவ்வூர் உதகமூர் என வழங்கப்பெற்ற வழக்கும் உண்டு.

## திருப்பணி 3

தேவகோட்டை சித. முரு. முருகப்பச் செட்டியார் செய்த திருப்பணியே மூன்ருவது திருப்பணி. இத்திருப்பணி முடிந்து குடமுழுக்கு நீராட்டு விழா முடிந்து இற்றைக்குச் சற்றேறக்குறைய 75 ஆண்டுகள் ஆகின்றன. உறையூர், ஐவண்ணநாதர் ஆலயம் அழியாப்பெருமை வாய்ந்த சிற்பங்களின் திருக்கூடமாக இன்று திகழ்வதற்குக் காரணமாக இருந்தது இந்த மூன்ருவது திருப்பணியே.

ஐவண்ணநாதர் சுயம்புமூர்த்தமாகையாலும், ஐவண்ணருக்குத் தனியே அம்மன் சந்நிதி இல்லாமை யாலும், திருக்கோயிலின் எல்லையிலேயே காந்தி மதியம்மை திருவுரு அமைந்தமையாலும், காந்தி மதியம்மை உடனுறை ஐவண்ணநாதர் என்ற அமைப்பில் ஒருவகை இணைந்த திருப்பணியாக இந்த மூன் ருந் திருப்பணி அமைந்தது.

முதல் திருப் பணியின் மேற்புற மண்டபத்தை ஒட்டி அமைந்த வடபுறத்துத் திருமதில் திருப்பணியை அப்படியே தொடர்ந்து அமைத்து வந்தாலும் உற்சவ மண்டபம் முதல் திருப்பணித் திருமதில் எல்லையைக் கடந்து வடக்கே நீண்டு சென்று சிறப்பாக அமையுமாறு அமைத்த பெருமையானது மூன்றுவது திருப் பணியையே சாரும்.

திருக்கோயில் திருப்பணி என்ற பொது அமைப்பில் செய்யாமல், இங்கொன்றும் அங்கொன்றுமாக இருந்தவைகளை இணைத்து, ஒரு முழுமைபெற்ற திருக்கோயிலாக அமைத்துக் காட்டும் வகையில் இம்மூன்றுவது திருப்பணி அமைந்தது என்று கொள்ளவேண்டும்.

மேலே குறிப்பிடப்பெற்ற திருக்கோயில் வரலாறுகளை உள்ளடக்கிய சிற்பங்களை அமைத்துச் சிறப்பித்த பெருமையும் இம்மூன்றுவது திருப்பணிக்கு உ ண்டு. அடுத்து இக்கோயில் திருமதில் திருப்பணி மேற்கொள்ளப்பட்டு 1.8.1985ல் திருப்பணி நிறைவு விழா நடைபெற்றது. கடைசியாக சென்ற 8.2.89ல் இக்கோயிலில் திருப்பணி செய்யப்பட்டு குடமுழுக்கு நீராட்டு விழா நடைபெற்றது.

16

# சிறந்த சிற்பங்கள்

1...4 கருவறையின் தென்புறச் சுவர், வடபுறச் சுவர் ஆகிய இரண்டிலும் நான்கு இடங்களில் கீழே மலர்ப்பீட அலங்காரம் அமைத்துக்காட்டி மேலே அமைக்கப்பெற்ற நான்கு சிற்பங்கள். அவை முறையே

1. நந்தியுடன் கூடிய கடவுளை அரசன் வணங்குவதாக அமைந்த நிலை.
2. ஊர்த்துவ தாண்டமூர்த்தி
3. கரியுரி தாண்டமூர்த்தி
4. ஏகபாத மூர்த்தி

5. கருவறைத் திருச்சுற்றில் வடமேற்கு மூலைத்தூணில் கிழக்கு பக்கம் நோக்கிய நிலையில் சிங்க வாகனத்தின் மேல் அமர்ந்திருக்கும் ஐம்முக விநாயகர் சிற்பம்.

6. காந்திமதியம்மை திருக்கோயில் மேல்புறச் சுவரில் உள்ள உதங்கமுனிவர் சிவபூசைச் சிற்பம்.

7. காந்திமதியம்மை திருக்கோயில் கீழ்ப்புறச் சுவரில் உள்ள யானையை அடக்கிய கோழிச் சிற்பம்

8. கொடிக்கம்பத்தை ஒட்டிய தென்புறத் தூணில் உள்ள மலைமேல் அமர்ந்திருக்கும் ஆஞ்சநேயர் சிற்பம்.

9. வரைபடத்தில் 13 என்ற எண்ணுற் காட்டப் பெற்றுள்ள இடத்தில் உள்ள உதங்கமுனிவர் திருவுருவம்.

10. தென்முகக் கடவுள் திருவுருவம் இரண்டனுள் பெரிய திருமேனி, சிற்ப அழகுடன் திகழ்வது.

# பின்வந்த திருப்பணிகள்

தேவகோட்டை சித.முரு. முருகப்பச் செட்டியார் திருப்பணியை ஒட்டி 2.2.1924 ல் நிலைக்கண்ணாடி அமைத்தல் திருப்பணி. திருச்சி, இரும்பு ஷாப்பு வர்த்தகம், தி. கோவிந்த செட்டியார் தி. கந்தசாமி செட்டியார் ஆகியோர்களாற் செய்யப்பெற்றது.

1934ல் உறையூர் அமரர் மே.சு. நடேசம் பிள்ளை அவர்களால் மின்சார விளக்கு அமைத்தல் திருப்பணி நடைபெற்றது.

4.7.1957ல் திருக்கோயில் உள்ளமைந்த தெற்குத் திருச்சுற்றில் புகழ்ச்சோழர் திருவுருவமைப்புத் திருப்பணியைத் திருவாளர்கள் R. சின்னையா நாயுடு சுந்தரம் பிள்ளை M.கோபாலன் ஆகியோர்கள் செய்துள்ளார்கள்.

1.8.95ல் இத்திருக்கோயில் திருமதில் திருப்பணி செய்யப்பட்டு நிறைவு விழா நடைபெற்றது. கீழ்கண்ட அறங்காவலர் குழுவினரால்

திரு. **ஆ.சி. லிங்கையன் செட்டியார் அவர்கள்**
*அறங்காவலர் குழுத்தலைவர்*

திரு. **A. இராமசாமி செட்டியார்** *அவர்கள் அறங்காவலர்*

திரு. **P. தட்சிணாமூர்த்தி** *அவர்கள் அறங்காவலர்*

திரு. **மா. குப்புசாமி செட்டியார்** *அவர்கள் அறங்காவலர்*

திரு. **T.V. சொக்கலிங்கம்** *அவர்கள் நிர்வாக அதிகாரி*

8.2.89 ல் கடைசியாக திருப்பணி செய்யப்பட்டு திருக்குடமுழுக்கு நீராட்டு விழா நடைபெற்றது.

## 18

# மூர்த்திகளும் தீர்த்தங்களும்

## *மூர்த்திகள்*

### *அ) மூலவர்*

1) திருக்கோயில் மூலமூர்த்தி சுயம்புலிங்கம் யானையின் மதத்தை அடக்கிய கோழியாக வந்த வரலாற்றின் அடிப்படையில் திருமூக்கச்சுரத்தடிகள் என்ற பெயரால் வழங்கப் பெற்றார்.

கல்வெட்டுகளில் காணப்பெறும் பெயர்களாக வேந்தன் மூக்கீஸ்வரம் உடையார் திருஉடைத்தலை மகாதேவர் என்பவைகள் காணப்பெறுகின்றன.

2) பிரமனுக்கு ஐந்து நிறங்களை வெளிப்படுத்தியதாலும் உதங்க முனிவருக்கு ஐந்து வழிபாட்டுக் காலங்களிலும் முறையே இரத்தினம், படிகம், பொன், வைரம், சித்திரம் என்ற ஐந்து வேறு வேறு வண்ண வடிவம் காட்டினான் என்ற வரலாற்றின் அடிப்படையில் பஞ்சவர்ணேசுவரர் என்றும் தமிழில் ஐவண்ணப் பெருமான் ஐந்நிற நாயனார் என்றும் வழங்கப் பெற்றார்.

3) வில்வம் தலவிருட்சம் ஆதலின் வில்வாரணிய நாதன் என்ற பெயரோடு உறந்தைநாதன், காந்திமதி மணவாளன் என்ற பெயர் வழக்குகளும் உள்ளன.

### ஆ) காந்திமதியம்மை

சூரவாதித்த சோழன் நாகலோகக் கன்னியாகிய காந்திமதியைக் காதலித்து மணந்தான். அவள் நாகலோகத்தில் தன் தந்தை பூசித்த இலிங்கத்தில்

ஒருபாதியாக அமைந்த ஓர் இலிங்கமும் தம் தமக்கை யர்கள் பூசை செய்த நான்கு இலிங்கங்களேயும் தான் பூசித்த இலிங்கத்தையும், தன் தாய் மரபு வழியில் பூசித்த காந்திமதியம்மை திருவுருவத் திருமேனியையும் எடுத்து வந்து சூரவாதித்த சோழன் அரண்மனையில் வைத்து, தானும் தன் கணவனும் பூசித்து வந்தனர். ஆறு பிரிவாக நின்ற இலிங்கங்கள் ஒரே இலிங்கமாக இணைந்தன. அந்த இலிங்கமும் காந்திமதியுமாக வில்வாரணியத்தில் இணைந்துவிட்டமையால் நாக லோகத்தில் மரபு வழியில் வழிபடப்பெற்று வந்த காந்திமதியம்மையே இத்தலத்துக்கும இறைவியாக நிற்கிருள். ஆறு இலிங்கங்கள் ஒருருவ இலிங்கமாக இணைந்தன அவ்வாறு இணைந்த இலிங்கத்தின் தேவியாக நின்ற பெருமாட்டியே காந்திமதியம்மை

## இ) உதங்க முனிவர்

இவருக்காகவே இறைவன் ஐவண்ணங்காட்டிய சித்திரஇலிங்கமாக அமைந்தான் என்ற வரலாற்றுக் குரிய மூர்த்தம் ஆடித்திங்கள் முழுநிலா நாளில் (ஆடிப் பௌர்ணமி) உதங்க முனிவருக்கு ஐவண்ணம் காட்டிய தாக வரலாறு.

## ஈ) புகழ்ச்சோழர்

புகழ்ச்சோழர் வரலாறு பெரிய புராணத்தில் பேசப் பெறுகிறது. உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த சோழப் பேரரசர். இவர் வரலாறு தனியே எழுதப்பெற்றுள்ளது. இவர் அருள் பெற்ற நாள் ஆடிக் கார்த்திகை.

# 20
# தீர்த்தங்கள்

## 1) சிவதீர்த்தம்

'யானையை அடக்கிய கோழி' வரலாற்றுக்குப் பின் சோழ அரசன் திருக்கோயில் அமைத்தபோது அமைக்கப்பெற்ற தீர்த்தமே திருக்கோயில் உள்ளே இருக்கும் திருக்கோயில் திருக்குளம். அதன் பெயரே சிவதீர்த்தம்.
உதங்கமுனிவர் நீராடிப் பேறுபெற்ற தீர்த்தம்
வேதச்சுருதி நீராடிப் பேய்வடிவு நீங்கப் பெற்ற தீர்த்தம்
தன்னிடம்விழுந்து இறந்தபன்றிக்கு தேவவடிவு அருளிய தீர்த்தம்

## 2) நாகதீர்த்தம்

சர்ப்பநதி என்னும் பிரிவுடன் வரும் ஆற்றின் கிளையாகப் பிரிந்து, குடமுருட்டி என்ற பெயரில் ஒடும் சிற்றாறு.

# நாட்பூசையும் நல்விழாக்களும்

## நாட்பூசை

நாள்தோறும் இக்கோயிலில் காலை, உச்சி, மாலை, இரவு ஆகிய நான்கு காலங்களிலும் அபிஷேக ஆராதனைகள் நடைபெறுகின்றன.

## திருவிழாக்கள்

1. பிரதோஷ காலச் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது.
2. திங்கள்தோறும் கார்த்திகை நன்னாளில் சிறப்பு வழிபாடும் எழுந்தருளுந் திருமேனி திருக்கோயிலுக்கு உள்ளேயே உலா வருதலும் உண்டு.
3. ஆண்டுதோறும் சித்திரை முழு நிலவுநாள் (சித்திரா

பௌர்ணமி) விழா உண்டு

4. ஆனித் திருமஞ்சன விழா

5. ஆடித் திங்களில் மூன்று விழாக்கள்.

(அ) ஆடித்திங்கள் முழுநிலா நாளில் (ஆடிப் பௌர்ணமி) உதங்க முனிவருக்கு ஐவண்ணங்காட்டி அருளியதின் நினைவாகப் பஞ்சப்பிராகார விழா நடைபெற்று வருகிறது.

(ஆ) ஆடித்திங்கள் கார்த்திகை நன்னாளில் புகழ்ச் சோழன் நினைவு நாள் நடைபெறுகிறது.

(இ) ஆடி அமாவாசை காவிரித் தீர்த்த விழா.

6. ஆவணி மூலத் திருவிழா நடைபெறுகிறது.

7. புரட்டாசியில் நவராத்திரி விழா உண்டு.

8. ஐப்பசியில் முழுநிலா நாளில் அன்னபிஷேக விழா உண்டு

ஐப்பசியல் கந்தர்சட்டிப் பெருநாள் விழா உண்டு.

9. கார்த்திகையில் தீப விழா. கார்த்திகை மாதம் திங்கட் கிழமைதோறும் சோமவாரவிழா: நான்கு சோமவாரமும் சங்காபிஷேக விழா

10. மார்கழி முப்பது நாட்களும் திருப்பள்ளியெழுச்சிச் சிறப்பு வழிபாட்டு விழா.

மார்கழி திருவாதிரை நாட் கூத்தப்பெருமான் விழா. ஆதிரையை ஒட்டிப்பத்து நாட்கள் மணிவாசகர் எழுந்தருளுதல் உண்டு

11. தைத் திங்களில் தைப்பூச விழா.

12. மாசித் திங்களில் சிவராத்திரிச் சிறப்பு விழா உண்டு.

13. பங்குனி உத்திரத்திருவிழா.

## பெருவிழாக்கள் (பிரஹ்மோத்சவம்)

அருள்மிகு ஐவண்ணநாகனுக்குக் கொடியேற்றம்

செய்து நித்திய நைமித்தியங்களிற் குறைவு நீக்கும் பொருட்டும் உலக உயிர்களின் நன்மை கருதியும் பத்து நாட்கள் எடுக்கும் விழாவே பெருவிழா எனப்பெறும். இதையே பிரஹ்மோத்சவம் என வழங்குவர்.

வரலாற்று முறைப்படி, ஐவண்ணப் பெருமானுக்கு அமைக்கப்பெற்ற பெருவிழாவானது பங்குனி உத்திர நன்னாளை ஒட்டியதாக அமைந்தது. சங்க இலக்கியங் களிலேயே மிகவும் சிறப்பித்துப் பேசப்பெற்ற மூவேந்தர் விழாக்களுள், சோழர்க்குரிய விழாவானது உறையூர்ப் பங்குனி உத்திரப் பெருவிழாவே.

'யானையை அடக்கியகோழி' என்பதன் தத்துவப் பொருளை மூலமாகக்கொண்டு அமைக்கப் பெற்ற இப்பெருவிழா இப்போது நடைபெறவில்லை.

வைகாசிப்பெருவிழா இப்போது நடைபெற்று வருகிறது. சூரவாதித்த சோழனால் இவ்விழா ஏற்படுத்தப் பெற்றதாகக் கூறப்பெறுகிறது. வைகாசி விசாகத்தை ஒட்டிக் கொடியேற்றம் செய்து, பத்து நாட்கள் பல வாகனங்களில் திருவீதி உலா வருதல் உண்டு.

தேர்த்திருநாளன்று கட்டுக்தேர் அமைத்துத் திருவீதி வலம் நடைபெறுகிறது. திருத்தேர் ஒன்று இருந்தது என்றும் அது காலப்போக்கில் பாழ்பட்டுவிட்டதென்றும் செவிவழிச் செய்தியால் அறியலாம்.

## திருக்கோயில் வருவாய்: உடைமைகள்

உறையூர் ஐவண்ணப் பெருமான் சுயம்புலிங்கம். சுயம்பு இலிங்கம் என்பது தமிழில் திருத் தான்தோன்றி நாதர் என்று வழங்கப்பெறும். திருத் தான் தோன்றி



புகழ்ச்சோழ நாயனார்

என்பதன் மருவிய சொல்லே திருத்தாந்தோணி என்பது, திருத்தாந்தோணி, திருத்தாந்தோணித் தெரு என்ற உறையூர்ப் பகுதிகள் உறையூர் ஐவண்ண நாதன் சுயம்பு இலிங்கம் என்பதை மூலமாகக் கொண்டு எழுந்தவை. இக்கோயிலுக்கு உறையூர், சிந்தாமணி, வயமுரர், கூடலூர் முதலிய ஊர்களால் 44 67 ஏக்கர் நன்செய் புன்செய் நிலங்கள் உள்ளன. திருக் கோயிலைக் சேர்ந்த மனைப்பகுதிகளும் உள்ளன. இப்போதுள்ள மதிப்பின்படி ஆண்டொன்றுக்கு இதன் வருவாய், சற்றேறக்குறைய 3,45,000 என கணக்கிடப் பெற்றிருக்கிறது.

## நிர்வாக செயல்முறை

தமிழக அரசின் அறநிலையப் பாதுகாப்புத்துறையின் ஆட் சியின் நேர்க் கண்காணிப்பில், அத்துறையினரால் அமர்த்தப்பெற்ற நிர்வாக அதிகாரியும், அறங்காவலர் குழுவும் திருக்கோயிற் காரியங்களை நிர்வகித்து வருகின்றனர்.

## வரலாற்று சான்றுகள்

### அ) கல்வெட்டுகள்

உறையூர்ப் பெருமை கேட்கப்படுமளவிற்கு இக் கோயிலில் கல்வெட்டுகள் நிறைந்த எண்ணிக்கையில் இருந்திருக்க வேண்டும்.

1890 ஆம் ஆண்டில் 51 என்ற எண்ணிலும், 1907ஆம் ஆண்டில் 181 முதல் 188 வரை உள்ள எண்களிலும், உறையூர்த் திருக்கோயில் கல்வெட்டுகள் அரசாங்கத்தால் பதிவு செய்யப்பெற்றுள்ளன. திருப்பணிக் காலங்

களில் கற்கள் இடம் பெயர்ந்தமையால் இக்கல்வெட்டு கள் திருக்கோயில் வளாகத்திற் காணப்பெறவில்லே. படியெடுக்கப் பெற்ற கல்வெட்டுகள் மூலமாகவும் நமக்கு மிகச் சுருங்கய அளவிலேயே வரலாற்றுச் செய்திகள் கிடைக்கின்றன.

## ஆ) சங்க இலக்கியம்

வரலாற்றில் தான் குறிக்கப்பட வேண்டுமே என்ற கவலே இல்லாமல், வரலாற்றையே உருவாக்கிக் கொடுக்கும் ஆற்றல் பெற்றதே உறையூர். உறையூர் வரலாற்றில் எந்த ஒன்றையும் இது கோயிலுக்குரியது இது அரசுக்குரியது என்று பிரித்தறிய முடியாத அளவுக்கு மக்கள் வாழ்வின் அடித்தளத்தை மையமாகக் கொண்டே அனேத்து வரலாறுகளும் நடந்திருக்கின்றன. சங்ககாலமுதல் இன்று வரையில் உறையூர் பற்றிய வரலாறுகள் பலவாக உள்ளன. அவைகள் யாவும திருக்கோயிலோடு தொடர்பில்லாதவை என்று கூறமுடியாது.

''கறங்கிசை விழாவின் உறந்தை''
''மாட மதுரையும் பீடார் உறந்தையும்''
''அறந் துஞ்சு உறந்தை''
''அறங் கெழு நல்லவை உறந்தை''

என்பவை சங்க இலக்கியச் சான்றுகளாகிய வரிகள்.

''ஊரெனப் படுவது உறையூர்'' என்ற பழமொழியைப் பெற்ற பெருமையுடையது உறையூரே.

சங்க காலப் புலவர்களில் இளம்பொன் வாணிகனர், ராணிச்சேரி முடமோசியார், மருத்துவன் தாமோதரனர், பொத்தியார் போன்ற சங்ககாலப் புலவர்கள் வாழ்ந்த இடம் உறையூர்.

**நட்பு** என்ற வாழ்வியல் அறத்துக்கு இலக்கணம் வகுத்து உலகுக்கு வழங்கிய பெருமை கோப் பெருஞ்சோழனுக்கும் பிசிராந்தையாருக்கும் உண்டு. கோப்பெருஞ்சோழன் ஆட்சி செய்து வாழ்ந்த இடமும், வடக்கிருந்த இடமும், உறையூரே.

**மானம் என்பது ஓர் அருமையான வாழ்வியல் அறநெறி**

மானம் பெருமை. கோப்பெருஞ்சோழன் தான் அறவாழ்வில் தாழ்ந்து விட்டதாக எண்ணுமளவுக்கு ஒரு நிகழ்ச்சி நடைபெற்றுவிட்டது. அறத்துக்கு மாறுக ஏதும் நடந்து விடவில்லே. தக்க சமயத்தில் தடுத்து நிறுத்தப் பெற்று விட்டது. எனினும், தன்னுடைய பெருமைக்குக் குறைவு நேர்ந்துவிட்டது என்று கருதி, ஆற்றின் நடுவே, வடக்கு நோக்கியிருந்து, அன்ன ஆகாரமின்றியிருந்து உயிர்விடுதல் என்ற செயலே மேற்கொண்டான். அவனுக்கு நேர்ந்த மானக் குறைவைத்தங்கள் மான குறைவாகத் எண்ணிப்பல புலவர்கள் வடக்கிருந் தார்கள். அதனுல் மானம் பெருமை என்ற அறத்துக்கும் பெருமை தந்த வாழ்வைக் கொண்ட உறையூர் பீடார் உறந்தை (பீடு பெருமை) எனப் பெற்றது. இது அறம் பற்றிய செயல்தானே என்ருல் இவ்வரலாற்று அடிப்படையில் உறையூர் இறைவன் திரு இடைத்தலே மகாதேவர் என்ற பெயர் பெறுகிருர் . இடைத்தலே என்பது ஆற்றின் நடுவிடம். அந்த இடத்தில் அறத்தின் உயர்வாழ்வு நிலேநிறுத்தப் பெற்றது. ஆதலின் திரு இடைத்தலே எனப்பெற்றது. ''அறந்துஞ்சு உறந்தை'' ''அறங்கெழு நல்லவை உறந்தை'' என்ற புகழ் வரிகள் உறையூருடன் இணேந்தன.

உலகை ஆளுதல் என்பதும் ஓர் அறம். அதைச் செய்ய

முற்படும்போது ஆணவம் பெருகிவிடும். மதம் பிடித்த யானைபோல் செயலாற்றுவான். அவனை அடக்கி அறத்தில் நிலை நிறுத்திய பணியை மேற்கொண்டவர் கோழியூர் இறைவன் மூக்கீச்சுரத்தடிகளே. யானையும், கோழியும் என்ற வரலாறு ஒரு பொது வரலாறேயாயினும் அது ஆட்சியையும் இறைவனையும் உட்கொண்ட திருக்கோயில் திருத்தல வரலாறாகிறது.

சான்றாண்மை என்பது அறங்கள் எல்லாவற்றையும் உயிர்கொடுத்து வாழவைக்கும் மூல அறம். ஒருவன் தான் அறவாளனாக வாழ்ந்து விடலாம். உலகையே அறத்தில் நிலை நிறுத்துவதற்காக அமைந்த அறமே சான்றாண்மை. சான்றோர் இருந்தால் அந்த ஊரில் தீமை நிகழாது. தீமைச் செயல் நடைபெறவில்லை யாயினும், அதற்குரிய விதைச்செயல் தோன்றிவிட்டதே என்பதற்காக உயிர்விட்ட சான்றோர்களைக் கொண்டு, உலகிற்குச் சான்றாண்மையை உணர்த்திய வரலாறு உறையூருக்கு உண்டு.

இங்கே குறிக்கப்பெற்ற சங்ககால வரலாறுகள் எல்லாம் உறையூர்த் திருக்கோயில் இறைவனோடு தொடர்புடைய வரலாறுகளே.

கி.பி 6ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த திருஞானசம்பந்தர் இவ்வூர் இறைவன் மேல் பதிகம் பாடும்போது, சேரன், சோழன், பாண்டியன் என்ற மூவரையும் தம்முடன் இணைத்துக்கொண்டு, அவர்களை நேர்மை ஆட்சியில் நிலைநிறுத்திக் காத்த வேந்தன், மன்னர் மன்னன் என்ற உறையூர் இறைவனைப் பாராட்டுகின்றார். ''தன் நேரியன்மை கொண்டான்' என்பதே ''கோனேரின்மை கொண்டான்'' என்ற கல்வெட்டுத் தொடராக அமைந்தது போலும்.

''அந்தண் மான தன் நேரியன் ஆக்கிய எந்தை'' என்பது தேவார வரி.

இனி வில்வ வனநாதன் என நின்ருன் இத்தலத்து இறைவன். வில்வம் மூன்ருகக்கிளைத்து நின்ற இலைகளைக் கொண்டது. மூன்றும் ஒன்ருக இணைந்திருப் பவைகளே வழிபாட்டுக்குரியது. அவ்வகையில் சேர, சோழ, பாண்டியர் என்ற மூவரசுகளையும் இணைத்து நிறுத்தி ஆட்சி கொண்ட பேரரசன் என்பதே இத்திருத்தல நாதனின் *வில்வச் செயல்.*

*யானை மும்மதம் உடையது. மும்மதமும்* அளவோடு வெளிப்படுமாளுல் அது யானையின் *சிறப்பிலக்கணம்* எல்லையைக் கடந்த நிலையில் மதம் பெருகுமாளுல் அதனை அடக்கி நிறுத்திய அருள் நிறை வரலாறு நடைபெற்றது. மூன்றை இணைத்து ஆண்ட வில்வம் போலவே, மும்மதத்தை இணைத்து ஆண்ட *கோழியாக* இவ்வூர் இறைவன் தன்னைப் புலப்படுத்திக் கொள்கிருன். அவ்வரலாறே கோழியாண் வரலாறு. இதுவரை அவன் *அறம் என நின்ற வரலாறு.*

தேவார இலக்கியச் *சான்று*

ஐவண்ணநாதர் *செல்வர் என்ற நின்ற* வரலாற்றுக்குச் சான்றுவது தேவாரம் முதலிய இலக்கியங்கள்.

''மல்கும் செல்வத் திரு உறையூர்'' என்பது *சங்க* காலத்தை அடுத்த காலத்தில், உறையூர் தன்னுடைய செயலாற் பெற்ற சிறப்பு நிலை. அறந்துஞ்சு உறந்தை *என நின்ற உறையூரே இடைக்காலத்தில்* செல்வ துஞ்சு உறையூர் எனப்பெற்றது. இங்கே அறத்துடன் பொருளை இணைக்கிருன் உறையூர்ப் பெருமான்.

"மல்லையார் மும்முடி மன்னர் மூக்கீச்சுரத் தடிகளைச்
செல்வராக் நினையும்படி சேர்த்திய செந்தமிழ்"
என்பது திருஞானசம்பந்தர் பதிகத்தின் இறுதிப் பாடலின் முதலிரண்டு வரிகள்.

ஐவண்ணப் பெருமான் சுயம்பு மூர்த்தம். தானே முதற்பொருள் : தன்னிடத்திருந்தே எல்லாம் தோன்றவேண்டும் என்ற மெய்மையை விளக்கிய பெருமானே உறையூர் ஐவண்ணப் பெருமான். இதற்குரிய வரலாறு இரண்டு.

1. பிரமனுக்கு ஐந்நிறம் காட்டியது
2. உதங்கமுனிவருக்கு ஐவகை வடிவம் காட்டியது

இரு நிகழ்ச்சிகளும் நடைபெற்ற இடம் உறையூரே.

பிரமனுக்கு ஐந்து நிறங்களைத் தன்னிடத்திருந்து வெளிப்படுத் தோன்றுமாறு செய்தார் திருமூக்கீச்சுர முடையார். ஆனல், உதங்கமுனிவருக்குப் பெருமான் காட்டியது ஐவகை வேறுபாடுற்ற இலிங்க வடிவம். இரண்டையும் ஒன்றெனக் கருதி மயங்கி விடுதலாகாது.

பிரமன் என்பவன் உலகைப் படைக்கும் தொழில் மேற்கொண்ட நான்முகக் கடவுள். உலகைப் படைப்பது என்பது பொருளுலகத்தையும், சொல்லுலகத்தையும் உண்டாக்கிக் கொடுப்பது. எல்லாப் பொருள்களும் தோன்றுவதற்குரிய மூலப்பொருள் ஐந்து. அவை மண், நீர், தீ, வளி, வான் என்பன. இவ்வைந்து மூலப்பொருள்களின் கலப்பே உலகப் பொருள்கள்.

எல்லாப் பொருள்களும் சொற்களால் சுட்டிக்காட்டப் பெறுகின்றன. சொல் என்பது ஒலிக்கூட்டம். அறிவதற்குரியது சொல் ஒலி: அனுபவிப்பதற்குரியது

பொருள். எனவே, மனிதன் அறிந்த ஒன்றை அனுபவிக்கவேண்டும். அவ்வாறே அனுபவத்தின் மூலம அறிவை பெறவேண்டும். இங்கே கூறப்பெற்றவைகளை முறையாக உண்டாக்கிக் கொடுத்தல் என்பதே படைத்தல்.

பிரமன் உறையூர்த் தலத்துக்கு வந்து, திருமூக்கீசுரத்தடிகளைப பூசித்து வணங்கி நின்ருன். அவனுக்குத் தன்னிடமிருந்து ஐந்து நிறங்களைத் தோற்றி வெளிப்படுத்திஞன்.

பொன்மை, வெண்மை, செம்மை, கருமை, புகைமை, (புகை நிறம்) என்பனவே ஐந்து நிறங்கள். ஐவகை நிறங்களைத் தோற்றுவித்தார் என்பதனுல் ஐந்நிற நாயனுர் எனப் பெற்ருர்.

## நிறந் தோற்றியதன் உட்பொருள் என்ன ?

பொன்மை நிறத்திலிருந்து மண் தோன்றும் வெண்மை நிறத்திலிருந்து தண்ணீர் வெளிப்படும் செம்மை யிலிருந்து நெருப்பு எழும் கருமையிலிருந்து காற்றும், புகை நிறத்திலிருந்து ஆகாயமும் வெளிபடும்.

பிரமனுக்குப் படைப்புத் தொழிலைத் தொடங்கி வைப்பதன் மூலமாக, படைக்கவேண்டிய எல்லாப் பொருள்களுக்கும் மூலம்தானே என்பதையும், ஐவண்ணங்களை வெளிப்படுத்துவதன் மூலம் எல்லாப் பொருள்களையும் படைக்கும ஆற்றலை நான்முகன் பெறுகிருன் என்பதையும் விளக்கிக் காட்டிஞர். எனவே, ஐம்பூதங்களையும் அடிப்படையாகக்கொண்டு தோன்றும் எல்லா வகையான செல்வங்களுக்கும் மூலமாக நின்ற முதற்பொருளே பஞ்சவர்ணேசுரர்

எனக் கொள்ள வேண்டும். ஐந்திலிருந்து ஒவ்வொன்ருக விரிந்த விளக்கமே இவ்வுலகம். எனவே, உலகப் பொமருமுள்களுக்கெல்லாம் மூலமாமகிய ஐந்து நிறத்தைத் தம்மிடமிருந்து வெளிப்படுத்தியுமையால், உலகப் பொருள் களெல்லாம் ஐவண்ணநாதரின் உடைமை களாகின்றன.

''நிறங்கள் ஓர் ஐந்துடையாய்''
என்பது திருவாசகம்

பிரமனை உலகப் படைப்புக்கு ஈடுபடச் செய்து, அவன் உலகைப் படைப்பதற்குரிய மூலங்களை வெளிப்படுத்திக் கொடுத்த ஆதிமூர்த்தி என நின்றவரே உறையூர் ஐவண்ண நாதப் பெருமான்.

எல்லா பொருள்களையும் குறிப்பிட்டுக் காட்டும் ஒலி வடிவங்களாகிய சொற்கள் இருக்கின்றன. எனவே, பிரமன் பொருளுலகைப் போலவே சொல்லுலகையும் படைக்கிருன்.

ஐந்து நிறங்களிலிருந்தே ஐந்து கலைகள் தோன்றுகின்றன. அவைகளிலிருந்தே சொல்லுலகம் விரியும். அ.உ.ம.நாதம், விந்து என்பவைகளின் கூட் டாகிய 'ஓம்' என்னும் பிரணவமும், அதன் விரிவாகிய 'சிவயநம' என்னும் மந்திரமும் சொற்கள், எழுத்துகள், சொல்லுலகம், தத்துவம் ஆகியவைகளும் விரியும்.

எனவே உறையூர் ஐவண்ணத்தடிகள் மூலமாக நிற்க, அவரிடமிருந்து, திருவாரூர் (அ) காஞ்சிப் பிருதிவிலிங்கமும்

திருவானைக்கா அப்புலிங்கமும்
திருஅண்ணுமலைத் தேயுலிங்கமும்



உறையூரின் சிறப்புக்குக் காரணமான மன்னன் பட்டத்து யானையை சேவல் தாக்கி வெல்லும் காட்சி, சித்திரமாக வடிக்கப்பட்டிருக்கிறது.

திருக்காளத்தி வாயுலிங்கமும்
திருத்தில்லை ஆகாயலிங்கமும்
விரிந்து நிற்கவும், ஒடுங்கி நிலைபெறவும் வேண்டும் எனத் தெரிகிறது.

இவ்வாறு பொருட்பிரபஞ்சம் ஐவண்ணத்தடிகளிடமிருந்து தோன்றவும் ஒடுங்கவும் நின்றது போலவே சொற்பிரபஞ்சமும் தோன்றி ஒடுங்கும் முறையையும் காண வேண்டும்.

சொல்லுலகத்தை அசைத்து அறிவு கொளுத்தும் நாயகனுகக் கூத்தபெருமான் அமைகிருன். அவன் ஆடும் சபைகள் ஐந்து.

திருக்குற்ருலம் சித்திரசபை திருநெல்வேலித் தாமிர சபை மதுரை வெள்ளிச்சபை சிதம்பரம் பொற்சபை திருவாலங்காடு இரத்தினசபை.

மேலே குறிப்பிடப்பெற்ற ஐந்து சபைகளில் கூத்தப்பெருமான் திருக்கூத்தியற்றினுலும், அவ்வரங்குகளில் மூலமூர்த்தியாக விளங்குபவைகள் ஐந்து இலிங்கங்கள். அவ்வகையில் திருக்குற்ருலத்தில் சித்திரலிங்கம், திருநெல்வேலியில் பொன் இலிங்கம், மதுரையில் வைர இலிங்கம், தில்லையில் படிக இலிங்கம், திருவாலங்காட்டில் இரத்தின இலிங்கம் அமைகின்றன.

மேல கூறிய அமைப்பில் சொற்பிரபஞ்சம் எனப்பெறும் ஒலியுலகம் விரிந்து, கூத்தபெருமானால் செயற்படுத்தப் பெறும்.

சொல்லுலகம் விரிவதற்கும் மூலமாக நின்ற பெருமான் உறையூர்த் திருமூக்கீச்சுரத்தடிகள் எனப்பெறும் சுயம்பு

மூர்த்தியே. இதற்குச் சான்று உதங்கமுனிவர் கண்ட காட்சியே. உதங்கமுனிவர் கண்ட காட்சியின் இறுதிக் காட்சியை இன்றும் நம்கண்களால் நாம் காணமுடியும்.

வேதம் ஆகமம், புராணம் மற்றும் எல்லாக் கலைகளிலும் வல்லவராக விளங்கிய உத்துங்க முனிவரின் புத்திரரே உதங்க முனிவர். தந்தையினும் சிறந்த கலை வல்லவரானார். நிலையற்ற பொருள்களை, ஆசைகளை முனிந்து முனிவர் ஆனார். ஒருநாள் அவர் மனைவி 'பிரபை' என்பாள் கங்கையில் நீராடும்போது ஒரு முதலை அவளை இழுத்துச் சென்று சின்னாபின்னப் படுத்திவிட்டது. எல்லாக் கலைகளையும் முற்றக் கற்றும் முனிபுங்கவராகியும் அவர் மனம் இந்நிகழ்ச்சியால் அலைந்து அமைதியுறாமல் தத்தளித்தது. கலைப்பயிற்சியாலும், தத்துவ ஆய்வாலும், யோகப்பயிற்சியாலும் சிறந்த அவரால் மனத்தை அமைதியாக்க முடியவில்லை. சிவத்தல வழிபாட்டைத் தொடங்கினார். உதங்கமுனிவர் உறையூர்த் திருமூக்கீச்சுரத்தடிகளை வந்து வழிபட்டார்.

காலை வழிபாட்டில் இரத்தினலிங்கமாக்.
காட்சியளித்தார்
உச்சிக்கால வழிபாட்டில் படிக இலிங்கமாகக்
காட்சியளித்தார்
மாலைக்கால வழிபாட்டில் பொன் இலிங்கமாகக்
காட்சியளித்தார்
இரவின் முதல்யாம வழிபாட்டில் வைர இலிங்க
மாகக் காட்சியளித்தார்.
அர்த்தயாம வழிபாட்டில் சித்திர இலிங்கமாகக்
காட்சியளித்தார்.

உதங்கமுனிவர் அர்த்தயாம வழிபாட்ற் கண்ட சித்திர இலிங்கத்தை இன்றும் நாம் காணலாம். இக்காட்சியால் உதங்கமுனிவருக்கு ஞானம் பிறந்தது. மனம் அடங்கி அமைதியுற்றது. ஞான அனுபவம் பெற்று முத்தி அடைந்தார்.

எனவே, கூத்தப் பெருமான் கூத்து நிகழும் ஐவகைச் சபைகளின் மூல இலிங்கங்கள் ஐந்தையும் தம்மிட மிருந்து தோற்றியும் ஒடுக்கியும் நின்ற மூல மூர்த்தியாக அமைந்த ஐவகை இலிங்கங்களுக்கும் மூல இலிங்கமாக - இலிங்கையனாக நின்றவர் திருமூக்கீச்சுரத்தடிகள்.

உறையூர் திருமூக்கீச்சுரத்தடிகள் சொல்லுலகம், பொருளுலகம் என்ற இரண்டின் தோற்ற ஒடுக்கங் களுக்கு மூலமாக நின்றவர் என்பதை அவ்வளவு எளிதாக அறிஞர்களை மனம் ஒத்துக் கொள்ளாது. உதங்கமுனிவர் நிகழ்ச்சியைக் கற்பனையாக்கத் துணியும் உதங்கமுனிவர் வரலாற்றை உண்மை என ஏற்பதற்கு உரிய சான்று, இன்றும் மூலவர் சித்திர இலிங்கமாக இருப்பதே. காட்சியளவையால் இந்த ஒன்றை ஒத்துக்கொடண்டால், தத்துவ அடிப்படையில் சொல்லுலகப் பொருளுலகத் தோற்ற ஒடுக்கங்களையும் தன்னுள் கொண்ட மூலமூர்த்தி என்பதை ஒத்துக்கொள்ளாமல் இருக்க முடியாது.

பஞ்சவர்ணேசுரர் ஐவண்ணநாதர் என்ற பெயருடைய மூர்த்தியும், தலமும் வேறு எங்கேயும் காணப் பெறவில்லை என்பதும் அறியவேண்டிய ஒன்று.

பிரமன் கண்ட ஐவண்ணம் என்பதே அனைத்துக்கும் மூலமாயினும், உதங்கமுனிவர் கண்டது ஐவகை இலிங்க அமைப்பு என்பதை வேறுபடுத்தி உணரவேண்டும். நிறத்தின் அடிப்படையில் முதல் நான்கு காட்சிகளை அமைத்துக் கொண்டாலும் 'சித்திரலிங்கம்' என்பதை நிற அடிப்படையில் அமைக்கமுடியாது.

எனவே, 'ஐந்நிறத்து அடிகள்' என்பது பிரமன் கண்ட காட்சி என அமைத்தால் ''இலிங்கையன் " இலிங்கம் + ஐயன் = இலிங்கத் தலைமையன் என்ற பொருளில் ''ஐவண்ண இலிங்க ஐயன்" எனக் கண்ட காட்சி உதங்கமுனிவருடையது என இரண்டையும் வேறுபடுத்திக் காணவேண்டும். ஐவகை நிறத்தின் அடைப்படையிலேயே இருவகைக் காட்சிகளையும் கொண்டு வரலாமாயினும், பொருளுலகம் சொல்லுலகம் என்ற இருவகைகளை உள்ளடக்கிய மூல முதற்பொருளின் காட்சி எனக் கொள்ளவேண்டும்.

பொருளுலகை அடிப்படையாகக் கொண்ட செயல்கள் ஐந்து : சொல்லுலகை அடிப்படையாக் கொண்ட செயல்கள் ஐந்து. இவ்வாறாக நின்ற செயல்கள் பத்தையும் திருமூக்கிச் சுரத்தடிகள் செய்வதாகத் திருஞானசம்பந்தர் தம் பதிகத்தின் முதல் பத்துப் பாடல்களிலும் குறிப்பிட்டுக் காட்டுகின்றார்.

திருக்கடைக்காப்பு என்னும் இறுதிப் பாட்டில் திருஞான சம்பந்தர் திருமூக்கீச்சுரத்தடிகளை யான் எவ்வாறு



குதிரையின் மீது ரதிதேவி.
மகளிர் உருவங்களைக்கொண்டே குதிரையின் தோற்றம் உருவாக்கப்பட்ட அற்புதமான சிற்பம்

அனுபவித்தேன்; அனுபவித்த நிலையில் என்ன கூறி விளக்கியிருக்கிறேன் என்பதையும் வரையறுத்துக் கூறுகிறார்.

1. மும்முடிகளைத் தனித்தனியே புனைந்து தமிழ் நாட்டை ஆண்ட மூவரசர்களுக்கும் முதன்மையாய் நின்ற முதன் மன்னர"

2.. 'திருமூக்கீச்சுரத்தடிகள்"

3. பொருளுலகமாக விரிந்து நின்ற செல்வத்துக்கும், சொல்லுலகாக விரிந்து நின்ற செல்வங்களுக்கும் தோற்ற இடமாகவும் ஒடுக்க இடமாகவும் நின்ற முதன்மைச் செல்வர்.

''*மல்லையார் மும்முடி மன்னர் மூக்கீச் சுரத் தடிகளைச்* செல்வராசு நினையும்படிச் சேர்த்திய செந்தமிழி"
என்பது திருஞான சம்பந்தர் திருவாக்கு.

தேவார இலக்கியச் சான்றின் மூலம் திருமூக்கீச் சுரத்தடிகள் எனக் கண்டதுபோலவே தேவாரத்தால் உதங்கமுனிவர் வரலாற்றால் மூக்கீச்சுரத்தடிகள் பொருள் நின்றார் என அறிய முடிந்தது.

இவ்வகையில் 'அறம் பொருள்' என நின்றார் திருமூக்கீச்சுரத்தடிகள் 'அறந்துஞ்சு உறந்தை' இப்போது ''மல்கும் செல்வத் திரு உறையூர்" என நின்றது.

## அருள்வாழ்வு இன்பவாழ்வு

*அறம் தானே என நின்று காட்டிய திருமூக்கீச்* சுரத்தடிகள் பொருளும் தானே என நின்று காட்டிய ஐவண்ணநாதர், இலிங்கையனாம் சித்திரலிங்கநாதர்

வரலாற்றுச் சான்றுகள் காட்டப்பெற்றன. இவ்வாறு நின்று உயிர்களுக்கு இன்பவாழ்வை வழங்கினார் என்பது பொதுக்கொள்கை.

இன்பவாழ்வு என்பது இதுவே என எடுத்துக் காட்டும் வகையில் நடைபெற்ற வரலாறே புகழ்ச்சோழநாயனார் வரலாறு. இவ்வரலாறு திருஞானசம்பந்தர் காலமாகிய கி.பி. 6ஆம் நூற்றாண்டுக்கும், சுந்தரர் காலமாகிய கி.பி. 9ஆம் நூற்ராண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் நடைபெற்றிருக்க வேண்டும். சுந்தரர் தாம் பாடிய திருத்தொண்டர் தொகையில்,

"பொழிற் கருவூர்த் துஞ்சிய புகழ்சோழற்கு அடியேன்" என்று குறிப்பிட்டருளுகின்றார்.

சங்ககாலம் முதல் உறையூரில் நடைபெற்ற எல்லா வரலாறுகளையும் இணைத்து விளக்கம் தரும் வகையில் அமைந்த பெருமையுடையது புகழ்ச்சோழர் வரலாறு.

உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிசெய்த சோழப்பேரரசரே புகழ்ச்சோழ. வரலாற்றுப் பெருமை, திருவருட்பெருமை உடையவர். இவரை முன்னிட்டு நடைபெற்ற நிகழ்வுகள் எல்லாமே கரூரில்தான் அமைகின்றன. புகழ்ச்சோழர் ஒருமுறை தன்னாட்டுக்கு உட்பட்ட கரூருக்குச் சென்றார்.

புகழ்ச்சோழர் கரூரில் தங்கியிருக்கும்போது ஒருநாள் பட்டத்து யானையைக் குளிப்பாட்டுதற்கு அதன் பாகர்கள் கொண்டு சென்றனர். வழியில் கரூர் சிவன்

கோயிலுக்கு தொண்டு செய்யும் சிவாமியாண்டார் பூங்குடலையுடன் சென்று கொண்டிருந்தார். யானை திடிரென விரைந்துசென்று சிவகாமியாண்டாரைக் கீழே தள்ளிவிட்டு, அவர் வைத்திருந்த பூக்கூடையைப் பற்றி இழுத்துப் பூக்களைச் சிதறி, மிதித்து ஓடியது கீழே விழுந்த சிவகாமியாண்டார் ஒலமிட்டு அழுதார். அழுகையொலி கேட்டு அங்கே வந்த எறிபத்தர் யானையின் துதிக்கையைத் தன் கையில் வைத்திருந்த மழுவால் வெட்டினார். எதிர்த்த பாகர்களையும் கொன்றார். செய்தி அறிந்த மன்னர் புகழ்ச்சோழர் குதிரையேறி அங்கே சென்றார். அங்கே சிவனடியார் இச்செயலை செய்யமாட்டார் என எண்ணிய புகழ்ச்சோழர் குதிரையினின்றும் இறங்கி, எறிபத்தரை நெருங்கி அவரை கூர்ந்து கவனிக்கிறார்.

"யானையைக் கொன்றது தாங்கள் என அறியேன்; நான் கேள்விப்பட்டது வேறு; நிற்க இந்த யானை செய்த பிழைக்காக இதனைப் பாகர்களோடு கொன்றது போதுமா! இத்தகைய தவறு நடைபெற நானும் ஒரு காரணம்; என்னையும் கொல்லவேண்டும்" என்று கூறித் தன் உடைவாளை எடுத்து அவரிடம் தந்தார்.

அரசர் தந்த வாளை வாங்கிக்கொள்ளவில்லையென்றால் அரசர் தானே தன்னை வெட்டிக் கொள்வாரே என்று கருதி வாங்கிய எறிபத்தர் சிவனடியாரிடத்து இத்தகைய பேரன்பு கொண்ட அரசருடைய யானையையும் பாகர்களையும் கொன்று விட்டோமே என்று வருந்தி, அரசர் தந்த வாளினால் தானே தன்னை வெட்டிக்கொள்ளப்போகிறார். ஆ ஆ

கெட்டேன் கெட்டேன் என்று அரசர் எறிபத்தரின் கையையும் வாளையும் பற்றிக் கொண்டார். இந்நிலையில் அசரீரி வாக்குத்தோன்றி வாழ்த்துகிறது. யானையும் பாகர்களும் உயிர்பெற்றெழுகின்றனர்.

பின்னர், புகழ்ச்சோழர் கரூரில் தங்கியிருக்கும்போதே தனக்குத் திறை செலுத்தாத 'அதிகன்' என்ற சிற்றரசன் மேல் போர் செய்யச் சேனைகளை அனுப்பினார். வெற்றிப் பெற்று வந்த சேனைகள், இறந்தவர்கள் தலைகளை அரசர் முன் குவிக்கின்றனர். அவற்றுள் சிவனடியார் தலை ஒன்று. சிவனடியார்களுக்குத் துன்பம் நேரலாகாது என்ற கொள்கையுடைய என் முன்னேயே சிவனடியார் தலை கிடக்கிறதே ! யான் தவறுபட்டு விட்டேன் என வருந்தித் தன் மகனுக்குப் பட்டம் கட்டச் செய்துவிட்டு, அச்சிவனடியார் தலையை ஒரு பொன்தட்டில் ஏந்திக்கொண்டே, தீயில் இறங்கிச் சிவபதம் பெற்றார்.

இத்திருக்கோயிலில் புகழ்ச்சோழ நாயனார்க்கு அவர் முத்தி பெற்ற திருநட்சத்திர நாளன்று வருடம்தோறும் விழா எடுக்கப்பட்டு சிறப்பாக நடைபெற்று வருகிறது.

திருக்கோயில் நந்தவனப் பூக்களை அரசன் அரசியின் விருப்பத்தால் தமக்கு உரிமையாக்கிக் கொண்டமையால் மண் மாரிபெய்தது. உறையூர் அழிந்தது என்பது ஒரு வரலாறு. செவிவழி வரும் இச்செய்திக்கு வேறு சான்றுகள் உண்டு. ஆனால் பூங்குடலையைப் பூக்களுடன் சிந்தி அழித்த யானையைக் கொன்ற சிவனடியாரைக் கொல்லாமல் அவர் கையில் தம் வாளைக் கொடுத்துத் தம்மைக் கொல்லுமாறு



இடமிருந்து வலம் S. செல்வம் அறங்காவலர் G. சம்பத்குமார் B.Sc., B.Ed., நிர்வாக அதிகாரி M. தங்கம் அறங்காவலர் குழுத் தலைவர் T. சுப்ரமணி அறங்காவலர் K. ரெத்தினகுமார் அறங்காவலர்

சொன்னதும், போரில் கொல்லப்பெற்ற சிவனடியார் தலையுடன் தீயில் இறங்கி, சிவபதம் பெற்றதும் ஆகிய இரண்டு செயல்களால் சிவனடியார் பத்தியில் சிறந்து விளங்கியதன் மூலம் அறத்தையும் அருளையும் நிலைநாட்டி பெருந்தகையயானார் புகழ்ச் சோழர்.

திருஞானசம்பந்தர் ஞானப்பாலருந்தியவுடன் தலைப்பட்ட சிவஞானத்தின் அடிப்படையில் அவர் அறிந்த செய்திகள் மூன்று.

1. எப்பொருளும் ஆக்குவான் ஈசனே
2. அப்பொருள்தான் ஆளுடை யார் அடியார்கள்
3. "இப்படியால் இது" என்பதன்றித் தம்மிசைவு கொண்டு இயலும் துப்புரவில்லார் துணிவு தூசு என்பனவே, அவற்றுள் ஆளுடையார் அடியார்கள் எனப் பெரும் சிவனடியவர்களுக்குத் தொண்டு பூண்டு வாழ்வதே அருள்நிறை இன்பவாழ்வு எனக்கொள்ளவேண்டும். இக்கருத்தை மையாமாக் கொண்டதே புகழ்ச்சோழர் வரலாறு.

1. வேடன் பேறுபெற்றது.
2. பன்றி முத்தி பெற்றது
3. வேதச்சுருதி பேய்வடிவு நீங்கப்பெற்றது.

ஆகிய செய்திகள் புராண வரலாறுகள். அவற்றை மகா வித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய உறையூர்ப் புராணத்தில் காண்க.

# உறையூர்த் திருத்தலத் தோத்திரங்கள்

திருஞானசம்பந்தர் பாடிய தேவாரப்பதிகம் 11 பாடல்கள்

சாந்தம் வெண்ணீறு எனப் பூசி வெள்ளம்சடைவைத்தவர்
காந்தள் ஆரும் விரல் ஏழையோடு ஆடிய காரணம்
ஆய்ந்து கொண்டாங்கறியந் நிறைந்தார் அவர் ஆர்கோலோ
வேந்தன் மூக்கீச்சுரத் தடிகள் செய்கின்றதோர் மெய்ம்மையே.

வெண்டலை ஒர்கலனாப் பலிதேர்ந்து விரிசடைக்
கொண்டலாரும் புனல் சேர்ந்து உமையாளொடுங் கூட்டமா
விண்டவர்தம் மதில் எய்தபின் வேனில் வேள் வெந்தெழக்
கண்டவர் மூக்கீச்சரத்து எம் அடிகள செய் கன்மமே

மருவலார் தம்மதில் எய்ததுவும் மான் மதலயை
உருவிலார் அவ்வெரி யூட்டியதும் உலகுண்டதால்
செருவிலாரும் புலி செங்கய லானையினான் செய்த
பொருவில் மூக்கீசுரத்து எம்மடிகள் செய்யும் பூசலே

அன்னமன்ன நடைச் சாயலாளோடு அழகு எய்தவே
மின்னை அன்ன சடைக் கங்கையாள் மேவிய காரணம்
தென்னன் கோழி எழில் வஞ்சியும் ஓங்கு செங்கோலினான்
மன்னன் மூக்கீச்சுரத்து அடிகள் செய்கின்றதோர் மாயமே.

விடமுன் ஆரவ்வழல் வாயதோர் பாம்பு அரை வீக்கியே
நடமுனார் அவ்வழல் ஆடுவர் பேயொடு நள்ளிருள்
வடமனீடு புகழ்ப் பூழியன் தென்னவன் கோழிமன்
ஆடல்மன் மூக்கீச்சுரத்து அடிகள் செய்கின்றதோர் அச்சமமே.

வெந்த நீறு மெய்யிற் பூசுவர் ஆடுவர் வீங்கிருள்
வந்தென் ஆர் அவ்வளை கொள்வதும் இங்கொரு மாயாமாம்
அந்தண் மானதன் நேரியன் செம்பியன் ஆக்கிய
எந்தை மூக்கீக்சுரத் தடிகள் செய்கின்றதோர் ஏதமே

அரையிலாருங் கலையில்லவன் ஆணோடு பெண்ணுமாய்
உரையிலார் அவ்வழல் ஆடுவர் ஒன்றலர் காண்மினோ
விரவலார் தம்மதில் மூன்றுடன் வெவ்வழல் ஆக்கினான்
அரையன் மூக்கீச்சரத் தடிகள் செய்கின்றதோர் அச்சமே.

ஈர்க்கு நீர்ச் செஞ்சடைக்கு ஏற்றதும் கூற்றை உதைத்ததும்
கூர்க்குநன் மூவிலைவேல் வலனேந்திய கொள்கையும்
ஆர்க்கும் வாயான் அரக்கன் உரத்தை நெரித்து அவ்வடல்
மூர்க்கன் மூக்கீச்ரத்து அடிகள் செய்யாநின்ற மொய்ம்பதே.

நீருளாரும் மலர்மேல் உறைவான் நெடுமாலுமாய்ச்
சீருளாருங் கழல்தேட மெய்த் தீத்திர ளாயினான்
சீரினால் அங்கு ஒளிர் தென்னவன் செம்பியன் வில்லவன்
சேரும் மூக்கீச்சுரத்து அடிகள் செய்கின்றதோர் செம்மையே

வெண்புலால் மார்பிடு துகிலினர் வெற்றரை யுழல்பவர்
உண்பினாலே யுரைப்பார் மொழி ஊமையதாக்கினான்
ஒண்புலால் வேல் மிக்கவல்லவன் ஓங்கு எழிற்கிள்ளி சேர்
பண்பின் மூக்கீச்சரத் தடிகள் செய்கின்றோதர் பச்சையே.

மல்லையார் மும்முடி மன்னர் மூக்கீச்சரத் தடிகளைச்
செல்வராக நினையும்படி சேர்த்திய செந்தமிழ்
நல்லராய் வாழ்பவர் காழியுள் ஞானசம்பந்தன்
சொல்ல வல்லாரவர் வானுல காளவும் வல்லரே

## 42

# உறையூர்ப் புராணம்

(மகாவித்தவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் இயற்றியது)

### விநாயகர்

1. நிலவு வெண் மருப்பில் ஒன்றினை முறித்து
நெடுங்கையிற் படையெனத் தாங்கி
வல வுடற் பகையைச் செற்றபின மரர்
மஞ்சன மாட்டிடப் பெற்றுக்
கலவுறிற் பகையைக் கோடலா மென்று
கதிர்ச்சடை யம்மருப் பமைந்தாங்கு
உலவு மொண் பிறைவைத் தேவர்க்கு மங்கலஞ்செய்
உத்தமக் களிற்றையேத் தெடுப்பாம்

### முருகன்

2. திருவமிகு தேவர்தொழு தேவனாதலிற் றேவர்
செம்மலீன்ற
பருவமட மகளையும் பைந்துளவணியும் பிறைக்கோட்டுப்
பன்றி குன்றி
வெருவவரு வேடர்தொழு வெடனாத லின்வேடர்
வேந்தனீன்ற
உருவமகளையு மணந்தின் பெவர்க்குமரு ளொருமுருகன்
ஒளிர்தாள் போற்றி

### நடராஜர்

3. தோற்றமொரு கைத்துடியில் திதியபயந் தருகரத்தில்
தொலைவோர் செங்கை
ஏற்றகவைக் கொழிந்தழலில் திரோபவமூன் றியதாளில்
எடுத்த தாளின்
மாற்றரிய அருள் வயங்க இருமுனிவர் பணிந்தேத்த
மறைகள் வாழ்த்தச்
சாற்றரிய அம்பலத்தில் நடநவிலும் பெருமானைச்
சார்ந்து வாழ்வாம.



யானையின் மீது மன்மதன்
மகளிர் உருவங்களைக்கொண்டே யானையின் தோற்றம்
உருவாக்கப்பட்ட அற்புதமான சிற்பம்

## பஞ்சவர்ணேஸ்வரர் (ஐவண்ணப்பெருமான்)

4. கைவண்ணத் துடையாற்கும் கதிர்வண்ணத் தாமரையிற் கலந்துளாற்கும்
மெய்வண்ணப் பெருமறைக்கும் வெளிவண்ண மாகானை விள்ளா அன்பர்க்கு
உய்வண்ணப்பொருந்தலன்றிநைவண்ணப் பொருந்தானை உறையூர் மேவும்
ஐவண்ண பெருமானை அலர்வண்ணப் புதுமலர்தூய் அகத்துள் வைப்பாய்

## காந்திமதியம்மை

5. நெருங்குமலர்க் கருங்குழலும் செவ்வாயும் வெண்ணகையும் நிலவுதோடும
இருங்கருணை பொழிவிழியும் மலர்முகமும் தனதடமும் எழிற்பூங்கையும்
சுருங்குமருங் குலுக்கலையும் கண்டமுமங் கலநாணும் துகள் தீர்செல்வம்
ஒருங்குதவும் காந்திமதி யம்மை திருத் தாளுமுளத்து உள்ளிவாழ்வாம்.

## தக்ஷிணாமூர்த்தி

6. முழுதுணர் முனிவர்தேற மூவகைப் பாசமாய
பழுதற வொழிந்தான் மாக்கள் பதநிழல டங்குமுண்மை
செழுமலர் பொருவும் அங்கை விரல்களால் தெரித்தியாரும்
தொழுதெழக் கல்லால்நீழல் வதிபவர் துணைத்தாள்போற்றி

## அகத்தியமுனிவர்

7. உயிரகஞ் செறிய வித்தையா மிருள் முழுதொழித்துச்
செயிரிலாப் புகழ்க் கிரணமெங்கணுஞ் செலக் செலுத்தி
பயமிகுந் தமிழ்ச் செங்கதிர் உதித்திட வாய்த்த
யமிகுங் குணக்குன்றமாம் அகத்தியன் பணிவாம்.

## திருஞானசம்பந்தர்

8. பால்மணக்கும் செவ்வாயும் தேன்மணக்கும் பங்கயப்பூம்
பைந்தாரோடு
நூல்மணக்கும் திருமார்பும் அருள்மணக்கும் இருவிழியும்
நூறையோடு
சேல்மணக்கும் வயற்காழித் திருஞான சமபந்தத்
தேவனின்பச்
சால்மணக்கும் மலரடியும் உள்ளுவாம் வினையனைத்தும்
தள்ளுவோமே.

## திருநாவுக்கரசர்

9. கந்தைமிகை யாங்கருத்தும் கையுழவாரப் படையும்
கவின்வெண் ணீறும்
சிந்தையிடை யறா அன்பும் சிவ ஞானம் பழுத் தொழுகும்
செய்யவாயும்
தந்தையொடு தாயிலான் திருவடிதை வருமனமும்
தாரைக்கண்ணும்
நித்தையறு முழுத்துறவும் உடையபிரான் அடிபணிந்து
நீடுவாழ்வாம்.

## சுந்தரமூர்த்தியார்

10. மலர்முகமும் திருப்பாடல் செவ்வாயும் வெண்ணூறு
மாலைத்தோளும்
பலர்புகழ மணிப்பூணூம் பரவையார் முலைச்சுவடு
பதிந்தமார்பும்
கலரணூகாப் பெருந்தகையைக் கொண்டுபணி
கொண்டருளக்
கதிக்கும் அன்பும்
அலர்பணைசூழ் திருநாவல் நம்பிதிருத் தாளுமுளத்து
அமைத்துவாழ்வாம்

## மாணிக்கவாசகர்

11. விதியறிதற் கரியமுடி மண்கூடை சுமப்பநறு
விரைப்பூஞ்செல்வி
பதியறிதற் கரியஅடி மலர்வையைக் கரைநறப்
பாயதீஞ்சொல்
துதியறிதற் கரியபொருள் அமைத்துருகி உருகியுளம்
சொற்றதேவைக்
கதியறிதற் கரியயான் முப்போதும் நினைந்துவினை
கழித்துய்வேனே.

### அறுபத்துமூவர்

12. புகழ்மிகு சரியைமுன்னாப் புகலூநாற்பாதந் தம்முன்
அகழ்வளுதத் தமக்கொன்றேற்ற சாதனங்கைக்கொண்டே
அகழ்மலத்தினராயம்மான் அடிநிழலடைந்துநாளும்
திகழறுபத்துமூவர் சேவடிசென்னிசேர்ப்பாம்.

## சிவபெருமான் துதி

13. நன்றுமாய்த்தீதுமாகி இருளுநல்லொளியுமாகி
ஒன்றுமாய்ப்பலவுமாகி உருவுமாயருவுமாகித்
தொன்றுமாய்ப்புதிதுமாகித் தோற்றமீறின்றிநின்றாய்
மன்றுளாட்டயவர்வாய்காந்தி மதிமண வாளபோற்றி

14. இவர்வடிவெட்டுளொன்று மதிசடையிருப்புளொன்றும்
இவர்விழிமூன்றிலொன்று மதியுலகேத்தாநிற்கும்
இவரிடப்பாலுங்காந்தி மதியெனில் எந்தஞான்றும்
இவர்திருவடிக்கேசேர்க என்னுடைமதியுமாதோ.

15. விடையனே காமற்காய்ந்த விழியனேகங்கைதாங்கும்
சடையனே எமனுதைத்த தாளனேதாக்கின்வன்றோய்
உடையனே அண்டம்யாவும் உடயைநாயகனே சூலப்
படையனே பஞ்சவர்ணப் பரமனே போற்றி, போற்றி.

16. மணமலிசூந்தற்காந்தி மதிமணவாள போற்றி
பணமலிஅரவம்பூண்ட பஞ்சவர்ணேச போற்றி
குணமலிஉறந்தைமேய குணப்பெருங்குன்றே போற்றி
நிணமலிமுடைக்குப்பாய நேசியேன்நிமல போற்றி

## காந்திமதியம்மமை பிள்ளைத்தமிழ்

(மகாவித்வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் இயற்றியது)

17. கள்ளையருந்தி உவட்டெடுத்துக்
கண்டந்திறந்து பாண்மிழற்றிக்
காளைக்சுரும்பர் அடைகிடக்கும்
கருந்தார் அளகக்கற்பகமே
வெள்ளைமயிற்கும் செம்மயிற்கும்
மேலாய்விளங்கும் பசுமயிலே
மெய்யே உணரும் உளத்தின்பம்
விளங்குகனியே மடவன்னப்
பிள்ளைநடைக்கும் வழுவுநிறீஇப்
பிடியின் நடக்கும் பெண்ணமுதே
பேரானந்தப் பெருங்கடலே
பிறங்க அறங்கொள் மனைதோறும்
வள்ளைமலியும் திருவுறந்தை
வாழ்வே வருகவருகவே
மாறாப்பவநோய் மாற்றுமலை
மருந்தே வருகவருகவே.

18. "மாலைவிலைபகர்வார் கிள்ளிக்களைந்தபூச்
சாலமிகுவதோர் தன்மைத்தாய்க் - காலையே
விற்பயில் வாகணம்போலுமே வேல்வளவன்
பொற்பார் உறந்தை அகம்" (முத்தொள்ளாயிரம்)

19. "மூக்கிச் சரநகர்வாழ் மோகமிகு காந்திமதி
வாக்காற் புகழ்பஞ்ச வர்ணனே "
(சிவநாமப்பலதொடை வெண்பா)

## வாழ்த்து

20. ஆவாழ்க மறைபுகலந் தணர்வாழ்க மனுநீதி
ஆன்றசெங்கோல்
கோவாழ்க உழவுதொழிற் குடிவாழ்க மழைபொழியும்
கொண்மூ வாழ்க
நாவாழ்க நாயன்மார் பாவாழ்க நல்லுறந்தை
நகர்வாழ்மூக்கண்
தேவாழ்க காந்திமதி அருள்வாழ்க அன்பரெல்லாம்
செழித்துவாழ்க.

(இத்தலத்தைக் குறித்துப் பிற்காலத்தில் பல அறிஞர்களால் அவ்வப்போது பாடப்பெற்ற பிரபந்தங்களும் உள்ளன.)

ஐவ்வண்ணப்பெருமான் அடிமலர் வாழ்க.

சுபம்.



கோயிலில் வேலைப்பாடு நிறைந்த உட்பிரகாரத் தோற்றம்